# அருளோசை

திருவள்ளுவர்
ஆண்டு 2003
புரட்டாசி
1972 செப்டம்பர்



ஸ்ரீ கற்பகாம்பாள்

கணேசன்

## தமிழ்நாடு தெய்விகப் பேரவை

சென்னை-14

## சந்தாதாரர்கள் கவனத்துக்கு

—:o:—

சந்தாதாரர்களாகப் பதிவு செய்யப் பெற்றிருப்பவர்களே வினு விடைப் பரிசுத் திட்டத்தில் சேரலாம். சொந்தக் கையெழுத்தில் முழு விவரங்களையும் எழுதவேண்டும். எழுத்துப்பிழை, இலக்கணப்பிழை இல்லாமல் எழுதவேண்டும். சுருக்கமாக எழுதி விளக்கவேண்டும். தனியே அனுப்பியுள்ள வினுத்தாளில் அதற்கென ஒதுக்கப்பட்ட இடத்தில்தான் விடைகளை எழுதவேண்டும். சந்தா எண்கள் 'அருளோசை' சுற்றப்பட்டுள்ள தாளில் தங்கள் அஞ்சல் முகவரிக்குப் பக்கத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

### சமயபாடபோதனை—பரிசு பெற்றோர்

### வினுவிடைப் பகுதி

**72, ஜூலை, இதழ்**

முதல் பரிசு: வே. தட்சிணுமூர்த்தி, மஞ்சக்கண்ணி, தஞ்சை மாவட்டம்

இரண்டாம் பரிசு: மு. வெங்கடேசன், சென்னை–7

மூன்ரும் பரிசு: அ. ஜெயராமன், சிவகுருநாதபுரம்

நான்காம் பரிசு: ர. மீனம்மாள், தூத்துக்குடி–2

**72, ஆகஸ்ட் இதழ்**

முதல் பரிசு: மு. வெங்கடேசன், சென்னை-7.

இரண்டாம் பரிசு: A. கிருஷ்ணன், பாலக்காடு, கேரளமாநிலம

மூன்ரும் பரிசு: A. N. இராஜகோபாலன், பரமக்குடி, இராமநாதபுரம மாவட்டம்

நான்காம் பரிசு: அ. மகாலிங்கம், திருமழபாடி, திருச்சி மாவட்டம்

பரிசுகள் புத்தகங்களாக அனுப்பிவைக்கப்பெறும்




(திங்களிதழ்)

ஞாலம் நின் புகழே மிக வேண்டும் தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே.

| மணி 1 | பரிதாபி புரட்டாசி 1972 செப்டம்பர் | ஓசை 3 |
|---|---|---|

அருளோசை அன்பர்களுக்கு

வணக்கம், அருளோசை இரு இதழ்களுக்கும் தாங்கள் அளித்துள்ள வரவேற்பு எங்களை மகிழ்ச்சியில் திளைக்கச் செய்கிறது. பல அன்பர்கள் " அருளோசை " இதழ் எப்படி இருக்க வேண்டும், வினவிடைப் பகுதி எப்படி அமைய வேண்டும் என்றெல்லாம் எழுதியிருந்தார்கள். அவற்றுள் ஒன்று வினவிடைப் பகுதி தனித்தாளில் இருக்க வேண்டும் என்பது அதை இந்த இதழிலேயே காணலாம். எனவே இந்த இதழுடன் தனித்தாளில் அச்சிட்டு வைக்கப் பட்டுள்ள வினவிடைப் பகுதியை பாதுகாப்புடன் எடுத்து வைத்து எழுதியனுப்ப வேண்டுகிறேன். வேறு வெற்றுத்தாளில் எழுதியனுப்பினலோ, சந்தா எண் குறிப்பிடப்படா விட்டாலோ, சந்தாதாரர்களாகப் பதிவு செய்துள்ளவர்கள் தவிர மற்றவர்கள் எழுதியனுப்பினலோ ஏற்றுக் கொள்ள இயலாது.

## இந்த இதழில்



" அருளோசை " ஒவ்வொரு ஆங்கில மாதம் 15-ஆம் தேதியன்று அஞ்சற் கட்டணச் சலுகையுடன் தபாலில் சேர்க்கப்படுவதால் அதற்குப்பின் சந்தாதாரர்களாகச் சேருபவர்களுக்கு அடுத்த இதழிலிருந்து தான் அனுப்பபடும். முதலிரண்டு இதழ்கள் கைவசம் இல்லே.

அ. நாராயணசுவாமி, பி. ஏ.,
பதிப்பாசிரியர்.

## ஸ்ரீ இராமநாதசுவாமி திருக்கோயில்,
## இராமேசுவரம்.



# கோடி அர்ச்சனை

ஸ்ரீ இராமநாதசுவாமிக்கு மூன்றாவது அர்ச்சனையும் ஸ்ரீ பர்வதவர்த்தினி அம்பாளுக்கு முதலாவது கோடி அர்ச்சனையும் 7.8.72-ஆம் தேதி சோமவாரத்தன்று தொடங்கப் பட்டு; தொடர்ந்து நடைபெற்று வருகிறது. ஒவ்வொரு சகஸ்ரநாமஅர்ச்சனைக்கும் தனித்தனிக் கட்டணம் ரூ. 10 (பத்து) நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இத்திருக்கோயிலில் நடைபெற்றுவரும் மாபெரும் திருப்பணிக்கு உதவ கோடி அர்ச்சனையில் பங்கு கொண்டு ஸ்ரீ இராமநாதப் பெரு மான் மற்றும் ஸ்ரீ பர்வதவர்த்தினி அம்பாள் அருட் பிர சாதமும், வெள்ளிக்காசுகளும் அடைவதோடு எல்லா நலன்களையும் பெற்றுய்ய பக்தப் பெருமக்களைக் கேட்டுக் கொள்ளப்படுகிறது.

நிர்வாக அதிகாரி

இராமேசுவரம் திருக்கோயில்
இராமேசுவரம்.




**நல்வாழ்த்துகள் !**

சென்ற கடிதங்களில் “கண்டதே காட்சி, கொண்டதே கோலம்” என்ற உலகியலே உண்மை என்ற கொள்கை எவ்வளவு பிழையானது என்பதை விளக்கினோம். நீ, எழுதியிருப்பதைப் போல, இன்று நம்முடைய நாட்டில் உலகாயதக் கொள்கை அணைந்துகொண்டிருக்கும் விளக்கேயாகும். அக்கொள்கைக்கு எதிர்காலமில்லை. பல நூற்றாண்டு வரலாறுடைய இந்திய நாட்டுச் சமய வரலாற்றில் உலகாயதம் பெற்றுள்ள இடம், மிகச் சொற்பமே. அதுமட்டுமல்ல, ஒரு கொள்கை தோன்றி வளர்ந்து மனித சமுதாயச் சிந்தனைப் போக்கில் அக்கொள்கை நிலைத்து நிற்கமுடியாமல் அழிந்து போவதும், அதே கொள்கை இடம்மாறி வேறொரு தத்துவக் கொள்கையில் இணைந்து உயிர்பெற்று வாழ்தலும் உண்டு. இந்திய நாட்டைப் பொறுத்தவரையில் உலகாயதத்திற்கு முதலில் சொன்ன அழிவு நிலையே ஏற்பட்டது. இந்திய நாட்டுச் சமயத் தத்துவங்களில் எந்தக் கொள்கைக்குள்ளும் உலகாயதம் ஊடுருவவில்லை; கலக்கவில்லை. அஃதொரு புத்தகத் தத்துவமாகவே இன்று விளங்குகிறது. இல்லை, நீ எழுதியிருந்தது சரியே! தலைவர் பெரியார் தத்துவ இயல் சிந்தனை அடிப்படையில் சிந்திப்பவரல்லர். அவர் ஒரு சமுதாய சீர்திருத்தத் தலைவர். அவ்வளவுதான்! ஆனால், பொதுவுடைமைத் தத்துவத்தின் ஆசிரியனாகிய கார்ல்மார்க்சின் பொதுவுடை

மைத் தத்துவத்தில் உலகாயதம் ஊடுருவி ஒளிபெற்று விளங்குகிறது. இதுபற்றி ஆராயும் பொழுது உனக்கு விரிவாக எழுதுகின்றோம்.

இந்திய சமயத் தத்துவக் கொள்கைகளுள் அடுத்து உயிர்ப்புள்ளதாக விளங்கியது—விளங்குவது. சமண சமயமே! சமண சமயம் இன்னும் இந்திய நாட்டில் சிலரால் பின்பற்றக் கூடியதாக விளங்கும் சமயம். அதுமட்டுமல்ல. இந்தியநாட்டின் தலைசிறந்த சமயமாகிய சைவத்திற்குள் சமண சமயக் கொள்கைகள் சில ஊடுருவி ஒளிபெற்றுத் திகழ்வதையும் நாம் மறந்து விடுவதற்கில்லை. சமணசமயம், இந்திய நாட்டின் காலத்தால் மூத்த சமயங்களுள் ஒன்று. பௌத்த சமயத்திற்கும் முன்தோன்றியது சமணம். சமண சமயத்தை முதன் முதலில் கண்டவர் இடபதேவர் என்ற மாமுனிவர். இந்திய சமயத் தத்துவ ஞான வரலாற்றில் அகிம்சைநெறி என்ற அருள் நெறியை முதன் முதலில் தந்தபெருமை இடபதேவருக்கே உண்டு, ஏன் ? தமிழ் நாகரிகத்திற்கு—சிவநெறிக்குக் கூட அகிம்சை நெறியாகிய நிறைநல் அருள் நெறியைத் தந்த பெருமை சமணத்திற்கு உண்டு என்று கருதவும் இடமிருக்கிறது. உயிர்க்கொலை செய்யாமை, புலால் உண்ணாமை ஆகிய சிறந்த பழக்கங்கள் சமணத்திலிருந்தே நமது நாகரிகத்திற்கு—சமயத்திற்கு வந்திருக்க வேண்டும் என்று நாம் கருதுகின்றோம். ஔவையார் என்ற பெயரில் நம்முடைய நாட்டில் பலர் வாழ்ந்திருக்கிறார்கள். கி.பி. இரண்டாம் நூற்றாண்டில்—சங்ககாலத்தில் வாழ்ந்த ஔவையாரே முதல் ஔவையார். சங்ககாலத்து ஔவையார் தமிழக அரசியல் வரலாற்றுக்கும் இலக்கிய உலகத்திற்கும் செய்த பணி, மனித இன வரலாறு உள்ள வரைக்கும் நிலைத்து நிற்கக் கூடியதாகும். இன்று, மனித வாழ்வுக்குச் சமாதானமே இன்றியமையாதது என்ற தத்துவம் வலியுறுத்தப் பெற்று வருகிறது. இந்த உயர்ந்த சமாதானத் தத்துவத்தை அரசர்கள் இருவரிடையே தூது சென்று வலியுறுத்திய பெருமை தமிழன்னை ஔவையாருக்கு உண்டு. தமிழ் மூதாட்டி ஔவையாரை அதியமான் நெடுமானஞ்சி என்ற அரசன் உடனிருத்தியும் உண்பித்தும் போற்றி வந்தான். செல்வ, இன்று புலால் உண்பாரிடையே மிகச்சுவையுடையதென்று பாராட்டப் பெறும்

கறிவிரவு புலவுச் சோறு சங்க காலத்திலேயே வழங்கிய சோறேயாம். அதியமானும், தானும் உடனிருந்து உண்ணும் பொழுது, கலத்தில் உள்ள சோற்றில் எலும்பும் தசையும் உள்ள பகுதி அகப்படின் அதியமான் உண்ணுது உண்டு மகிழ தனக்கு அளித்தனன் என்று ஔவையாரே கூறுகின்ருர்.

"என்பொடு தடிபடு வழியெல்லாம் எமக்கீயும் மன்னே" என்பது புறம். ஏன்? சமய உலகத்திலும் இதற்குச் சான்று உண்டு. கண்ணப்பர் வாழ்ந்தகாலம் கி.மு. 46 என்பர். கண்ணப்பர், காளத்தியப்பனே வழிபட்டபொழுது, புலாலேப் படைத்து வழி பட்டார் என்ற குறிப்பு கிடைக்கிறது. ஆனுலும், புலால் உணவை மறுக்கின்ற நாகரிகமும் அந்தக் காலத்தில் தோன்றி வளர்ந்து வந்திருக்கிறது என்பதைச் சிவகோசரியார் வாயிலாக அறிகின்ருேம். ஆக, இடபதேவர் தோன்றி அகிம்சை நெறியைச் சொல்வதற்கு முன்பு இந்திய மக்களிடத்தில் புலால் உண்ணும் வழக்கம் இருந்திருக்கிறது என்றே நம்ப முடிகிறது. இந்தச் சமணசமயம், தமிழர் நாகரிகத்தைப் போல் காலத்தால் மூத்தது; ஆரியர் வருகைக்கும் முந்தியது. சிந்துவெளி நாகரிக காலத்திலேயே சமணசமயத் தோற்றம் இருந்திருக்கிறது. இந்தச் சமணசமயம் இந்துசமயத்திற்குச் சில நல்ல கொள்கைகளேத் தந்திருக்கிறது. சிறப்பாக, அகிம்சை நெறி நமது பழங் கொள்கையாக இருந்தாலும் அதனேத் தந்த அல்லது அதனேத் தெளிவாக ஓர் ஒழுக்கமென எடுத்துக் கூறிய பெருமை சமண சமயத்திற்கேயுரியது. அது மட்டுமன்று. செல்வ, அகிம்சைக் கொள்கை யென்பதைத் தெளிவாக விளக்கி நடைமுறைப்படுத்த வழிகாட்டியதும் சமணசமயமேயாகும். பிறருக்கு வருத்தம் தரக்கூடிய தீங்கு செய்யாமை மட்டும் அகிம்சை யன்று. பிறர் செய்யக்கூடிய தீங்கை ஏற்றுப் பொறுத்தலும் அகிம்சையின் பாற்படும் என்றும் கூறுகிறது சமணம். அதுமட்டுமா? மேலும் ஒருபடி சமணசமயம் செல்லுகிறது. அனேத்துயிர்களிடத்தும் அன்புடன் பழகுதலும் அகிம்சைக் கொள்கை என்று விளக்குகிறது. செல்வ, சமணசமயத்தின் தத்துவம், அகிம்சைக் கொள்கையைப் பொறுத்த வரையில் இன்னும் விரிவாக வளர்ந்திருக்கிறது. உதவி செய்யக் கூடியதாயிருந்தும்—உதவி செய்தற்குரிய ஆற்றலேப் பெற்றிருந்தும் அந்த உதவியைச் செய்யாது

விடுதல் அகிம்சைக்கு மாருன இம்சை நெறி என்பது சமணத்தின் விழுமிய கொள்கை. இத்தகைய உயர்ந்த சமணசமயம் இந்திய சமுதாயத்தில் தோன்றிய பிறகு, இந்திய சமுதாயப் பழக்க வழக்கங்கள் சில புதிய ஒழுக்க நெறிகளைப் பெற்றன. மிகச்சிறப்பாகப் பொறிகள் அடக்கம்—புலன்கள் அடக்கம் முதலிய விழுமிய ஒழுக்கங்களைச் சமணசமயம் மக்கள் மன்றத்தில் வலியுறுத்தியது.

மனித இயலுக்கு மாருன தீமைகளை இனங்காட்டி ஒதுக்குவதில் சமணசமயம் செய்த தொண்டு அறிவியல் உலகத்திலும் ஒழுக்கவியல் உலகத்திலும் மறக்க முடியாத ஒன்று. பொதுவாக வெகுளி கூடாது என்பர் ஒழுக்க நூலோர். ஆனால், சமண சமயம் வெகுளியாகிய கோபத்தை மனங்கொளத் தக்க வகையில் இனம் பிரித்துக் காட்டித் தெளிவைத் தந்து மனித குலத்தின் சாபக் கோடாகிய வெகுளியை விரட்ட அது செய்த பணி பாராட்டுதலுக்குரிய பணி. சமண சமயம் கோபத்தை நான்கு வகையாகப் பிரிக்கிறது. அந்த நான்கில் முதலாவது "அனந்தானுபந்தி கோபம்", அதாவது, மலை அல்லது கல் இரண்டாக உடைந்தால் திரும்ப ஒட்டாது; சேராது. அது போல, ஒருபொழுது உண்டாகும் கோபம் திரும்பச் சேர முடியாமல் கீழ்மையான கோபம். இதனையுடையவர்கள் மிக மிகக் கீழ்மக்கள். இரண்டாவது, "அப்பிரயாக்யானி கோபம்". இது நிலத்தில் தோன்றிய வெடிப்புப் போன்றது. தஞ்சையில் உள்ள நன்செய்களில் கோடைகாலத்தில் வெடிப்புகள் தோன்றும். இந்த வெடிப்புகளை வேளாண்குடி மக்கள் "வங்காறுப்பு" என்பர். இந்த வெடிப்புகள் மழை பெய்து தண்ணீர் ஒடியதும் மறைந்து போகும். அது போலச் சிலர் கோபம் அடுத்த நிகழ்ச்சிகளில் மாறும். இத்தயை கோபம் உடையவர்கள் மோசமானவர்களல்லர் என்று கருதத் தக்கவர்கள். மூன்ருவது, "பிரத்தியாக்யானி கோபம்" என்பது. இது மணலில் கிழித்த கோடு காற்றடித்ததும் மறைந்து அழிந்து விடுவதைப் போல், கோபத்திற்குரியவரைக் கண்டதும் மறைவது. மனித உலகத்தில் இத்தகைய கோபத்தையுடையவர்கள் பரவாயில்லை என்று கருதத்தக்கவர்கள். அடுத்து நான்காவது, "சம்ஜவலனகோபம்". இதனை நம்முடைய. மூதுரை... அருளிச் செய்த ஔவையாரும் எடுத்துக்காட்டியுள்

ளார் அதாவது, தண்ணீரில் கிழித்த கோடு கிழித்த உடன் நிகழ்வர்கவே அழிவதைப் போல மாறும் கோபம். இத்தகைய கோபம் கொடியதல்ல; இனியது என்று சொன்னலும் தவ றில்லே. இங்ஙனம் கோபித்தும் கோபியாமல் வாழும் கலேயே வாழ்க்கைக் கலே என்று சமண சமயம் கற்றுத் தருவது நம் முடைய அறிவுக்கு விருந்தாக இல்லேயா? தத்துவத்தை விளக்கத்தான் உனக்குக் கடிதம் எழுத நினேத்தோம் இருந் தாலும் சமணசமயத்தின் சில சிறப்பியல்புகளே உனக்கு எழுத வேண்டும் என்ற ஆர்வமிகுதியால் எழுதி விட்டோம். அடுத்த கடிதத்தில் சமணசமயத்தின் தத்துவங்களேப் பற்றி எழுது கின்ருேம்.

என்றும் வேண்டும் இன்ப அன்பு.

இன்றக்கெதப்பகளா




## திருவான்மியூர் மருந்தீசர் கோயில்

திரு. கே. எஸ். நரசிம்மன், B.A., B.L., I.A.S.,
ஆணையர், அறநிலையத்துறை, சென்னை.

### முன்னுரை :

நமது சென்னை மாநகரின் எல்லைக்குள்ளேயே அமைந்திருக்கும் தேவாரப் பாடல்பெற்ற தலங்களுள், திருவான்மியூர் என்பதும் ஒன்று. அது திருமயிலாப்பூருக்குத் தெற்கே மூன்று கல் தொலைவில் கடற் கரைக்கு அணித்தாக, இந்நாளில் காந்திநகர் இந்திரா நகர் என வழங்கும் பகுதிகளை உட்கொண்டுள்ள அடையாற்றைச் சார்ந்து விளங்குகிறது.

ஒரு சிலர், திருவான்மியூர்-திருவாமூர்-திருவாய்மூர் என்னும் தலங் களின் பெயர்களை ஒன்றாகக் கருதிக்கொண்டு மயங்குவர். இம்மூன்று பெயர்களும் தனித்தனியே மூன்று தலங்களைக் குறிப்பவை. திருநாவுக் கரசர் அவதரித்த தலம் திருவாமூர்; திருவதிகைக்கு அருகில் உள்ளது. திருவாய்மூர் என்பது, அப்பர் சம்பந்தர் பாடல்பெற்றது; திருவாரு ருக்கு அருகே யிருப்பது. இவ்விரு தலங்களிலும் வேறானதாய்ச் சென்னை யின் ஒரு பகுதியாக இருப்பதுவே, திருவான்மியூர்.

### வான்மீகி முனிவர் :

முன்னொரு காலத்தில் மார்க்கண்டேய முனிவர், வான்மீகி முனி வருக்குச் சிவபூசை செய்வதின் சிறப்பினையும் இன்றியமையாமையினை யும் பற்றி விரித்துரைத்தார்; தம் உயிரைக் கவரவந்த கூற்றுவனிடத் திலிருந்து தாம் தப்பி உய்ந்தது, சிவபூசையின் பயனே என்று அறி வுறுத்தினர். அதுகேட்ட வான்மீகி முனிவர், இத்தலத்திற்கு வந்து சிவபிரானை வழிபட்டுப் பேறு பெற்றார். வான்மீகர் வழிபட்ட தலமாதல் பற்றி இத்தலத்திற்குத் திருவான்மியூர் எனப் பெயரமைந்தது. இத் தலத்திலேயே மார்க்கண்டேயர், இயமன், சந்திரன், சூரியன், இந்திரன் இராமன், பிரமன், திருமால், பிருங்கி முதலியவர்கள், சிவபிரானை வழி பட்டு அருள்பெற்றனர். சிவபெருமான், இங்கே வான்மீக முனிவர் வேண்டிக் கொண்டபடி, இத்தலத்தின் கிழக்கில் சென்மநாசனி (பிறவியைப் போக்குவது); தெற்கில் காமநாசனி (தீய ஆசைகளைப்

போக்குவது); வடக்கில் ஞானதாயினி (நல் அறிவை அளிப்பது); மேற்கில் பாபநாசனி (பாவங்களைப் போக்குவது); நடுவில் மோட்சதாயினி (முத்தியை அளிப்பது) என்னும் ஐந்து புனித தீர்த்தங்களை உண்டாக்கி யருளினர். இவற்றில் முறையே அன்புடன் மூழ்கி வழிபடுவோருக்குத் தீவினைகள் நீங்கி நலங்களெல்லாம் விளையும் எனத் தலபுராணம் சிறப் புறக் கூறுகின்றது. ஊரின் வடமேற்கில் வான்மீகி முனிவருக்குத் தனிச் சந்நிதி அமைந்துள்ளது. கோயிலின் உள்ளே திருச்சுற்றில் வான்மீகி முனிவருக்கு உற்சவ மூர்த்தம் இருக்கின்றது. மேலைக்கோபுர வாயிலில் வான்மீக முனிவருக்குத் தியாகராசப் பெருமான் பௌர்ணமி தோறும் திருநடனக் காட்சி அளித்தருள்கின்றார்.




## மருந்தீசர் :

ஒரு சமயம் அகத்திய முனிவர் இத்தலத்திற்கு எழுந்தருளிச் சிவ பிரானை வழிபட்டார். அதனால் மகிழ்ந்த சிவபிரான், அகத்தியருக்கு இயற்கையிலுள்ள எல்லாச் செடிகொடி மூலிகைகளின் குணங்களை அறியவும், இன்ன நோய் தீருவதற்கு இன்னின்ன பொருள்கள் மருந் தாகப் பயன்படும் எனவும் அறிந்து கொள்ளும்படி, மருந்தின் இயல்பு களை உபதேசித்தருளினர். அகத்தியருக்கு இங்கேயுள்ள சிவபெரு மான் பலவகை மருந்துகளை உபதேசித்ததனல் மருந்தீசர் எனப் பெயர் பெற்றார். மேலும் தம்மைத் தமிழால் துதித்த அகத்திய முனிவரின் அன்பிற்கு மகிழ்ந்த சிவபிரான், தமக்கும் பார்வதியம்மைக்கும் திருக் கயிலாயத்தில் நிகழ்ந்த திருமணக் கோலக் காட்சியை இத்தலத்தில் கண்டு மகிழும் பேற்றை வழங்கினர். அதனால் திருவான்மியூரில் பங்குனி உத்தரப் பெருவிழாவில், இறைவனின் திருமண தரிசனம் காண் பது மிகவும் சிறப்புடையதாகப் பெரியோர்களால் கருதப்படுகின்றது.



பால்வண்ணநாதர் :

வசிட்ட முனிவரால், சிவ பூசைக்குக் குறித்த நேரத்தில் வந்து உதவி செய்யாத குற்றத்திற்காகக் காட்டுப் பசுவாகும்படி சபிக்கப்பட்ட காம தேனு, இங்குவந்து, தனது மடியினின்றும் பால்சுரந்து, இறைவன் திரு முடியில் சொரிந்து, நாடோறும் வழிபட்டு வந்தது. 'சைதை' என இந் நாளில் வழங்கும் ஊரை ஆண்டுவந்த சதயூ என்னும் அரசன் வேட்டை யாடச் சென்றபோது, அப்பசுவைப் பிடிக்க எண்ணித் தன் அம்பை விடுத்தான். அதுகண்ட காமதேனு துள்ளிக் குதித்துத் தன் குளம்பை இலிங்கத்தின் மேல் வைத்துத் தாண்டி வெளிவந்து, அரசனின் படை களை அழித்தது. அரசன், இது தெய்விகப் பசு என்று தெளிந்து, பசு பால் சொரிந்து பூசித்ததனல், பால்வண்ணநாதர் எனப் பெயர் பெற்ற திரு வான்மியூர்ச் சிவபிரானுக்குக் கோயில் எடுத்தான். மண்டபம் கோபுரம் முதலியன கட்டினன். வீதிகள் வகுத்து நகரத்தை அமைத்தான். மக்கள் பலரைக் குடியேற்றி, நித்திய நைமித்திகங்கள் முதலியவற்றிற்கு ஏற்பாடு செய்தான். இங்குள்ள மோட்சதாயினி என்னும் தீர்த்தத்தில் மூழ்கி வழிபட்டு வீடுபேறு அடைந்தான். காமதேனுவின் காற் குளம்புகள், இன்றும் இலிங்கத்தில் அமைந்திருத்தல் காணலாம், இங்குள்ள அம்பிகைக்குத் திரிபுரசுந்தரி, சொக்கநாயகி எனப் பெயர்கள் வழங்கும். உற்சவ மூர்த்தி தியாகராாசர் என வழங்கப்படுவர்.

அப்பர் :

திருநாவுக்கரசர் காஞ்சிபுரம் வந்து, திருக்கழுக்குன்றம் அணைந்து, அங்கிருந்து வடக்கே கடற்கரைக்கு அருகேயுள்ள திருவான்மியூர் என்னும் இத்தலத்திற்குப் போந்தார். இங்கேயுள்ள மருந்தீசரைப் பணிந்து திருப்பதிகம் பாடிய பிறகே, திருமயிலாப்பூருக்கும் திருவொற்றி யூருக்கும் சென்று வழிபட்டார்.

விண்ட மாமலர் கொண்டு விரைந்துநீர்
அண்டர் நாயகன் தன்அடி சூழ்மின்கள்
பண்டு நீர்செய்த பாவம் பறைந்திடும்
வண்டு சேர்பொழில் வான்மியூர் ஈசனே —அப்பர்.

சம்பந்தர் :

திருஞானசம்பந்தர் காஞ்சிபுரத்தினின்று சென்று, திருக்காளத்தியை வணங்கிக் கொண்டு, திருவேற்காடு, திருவலிதாயம், திருவொற்றியூர் ஆகிய தலங்களைத் தரிசித்து, திருமயிலாப்பூருக்கு எழுந்தருளி, அங்கம்

பூம்பாவையாக்கி அற்புதம் நிகழ்த்தியதன் பின்னர், திருவான்மியூர் என்னும் இத்தலத்திற்குப் போந்தார். பல பதிகங்கள் பாடியருளினர். இங்கே சில நாட்கள் தங்கியிருந்தார். இங்கிருந்து திருஇடைச்சுரம் திருக்கழுக்குன்றம் முதலிய தலங்களுக்குச் சென்று வழிபட்டார்.

விரையார் கொன்றையினுய் விடம்உண்ட மிடற்றினனே
உரையார் பல்புகழாய் உமைநங்கை ஓர்பங்குடையாய்
திரையார் தென்கடல்சூழ் திருவான்மியூர் உறையும்
அரையா உன்னையல்லால் அடையாதுஎனது ஆதரவே

—சம்பந்தர்.

## முடிவுரை :

திருவான்மியூர்க் கோயில் பழமையும் பெருமையும் வாய்ந்தது. இராசராசசோழன் (கி.பி. 985-1014), இராசேந்திர சோழன் (கி.பி. 1012-1046), முதலாம் இராசாதிராசன் (கி.பி. 1163-1176 முதலிய சோழ அரசர்களின் காலத்துக் கல்வெட்டுகள். இக்கோயிலில் காணப்படுகின்றன. அவற்றில், "ஜெயங்கொண்ட சோழ மண்டலத்துப் புலியூர்க் கோட்டத்துக் கோட்டூர் நாட்டுத் திருவான்மியூர்" என்று இத்தலம் குறிப்பிடப் பெற்றுள்ளது. இத்தகைய இப்பழம் பெரும் தலம் இந்நாளில் சென்னையின் தென் பகுதியாய்ச் சிறப்புற வளர்ந்து செழிப்புற்று வருகின்றது. சென்னையின் வடக்கே திருவொற்றியூரில் பட்டினத்தடிகளின் சமாதி அமைந்து புகழ் பெற்று விளங்கி வருதல் போல, சென்னையின் தென் பகுதியாகிய இத்திருவான்மியூரில், சைவ சித்தாந்த ஞானபானு என ஒப்புயர்வற்றுத் திகழ்ந்திருந்த சிவத்திரு பாம்பன் குமரகுருதாச சுவாமிகளின் சமாதிக் கோயில் அமைந்து, தெய்விகச் சிறப்புடன் திகழ்தல் பெரிதும் மகிழ்தற்குரியது.

——:():——




## திருவையாறு அகலாத செம்பொற்சோதி

[வித்துவான் திரு. நா. குருசாமி]

திருச்சிற்றம்பலம்

ஓசை ஒலிஎலாம் ஆனாய் நீயே,
உலகுக் கொருவனாய் நின்றாய் நீயே
வாச மலரெலாம் ஆனாய் நீயே,
மலையான் மருகனாய் நின்றாய் நீயே,
பேசப் பெரிதும் இனியாய் நீயே,
பிரானாய் அடியென்மேல் வைத்தாய் நீயே,
தேச விளக்கெலாம் ஆனாய் நீயே,
திருவையாறு அகலாத செம்பொற் சோதி

—அப்பர்

[பொருள்] திருவையாறு என்னும் திருத்தலத்தினின்று அகலாது கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவந்த பொன்னை யொத்த ஒளிமயமான சிவபெருமானே! ஓசை ஒலி ஆகிய எல்லாமும் ஆனவன் நீயே; உலகுக்கு ஒப்பற்ற தலைவனாகவும் உள்ளவனும் நீயே; மணமிக்க மலர்களாக ஆனவனும் நீயே; மலையரையனுக்கு மருமகனாக வாய்த்த வனும் நீயே; பேசுதற்கு மிகவும் இனியனாக இருப்பவனும் நீயே; திரு நல்லூரில் இறைவனாக வந்து என் தலைமேல் நின்னுடைய திருவடியைச் சூட்டினவனும் நீயே; தேசங்களுக்கு ஒளிசெய்கின்ற ஒளிப்பொருளாக உள்ளவனும் நீயே ஆவாய்.

[விளக்கம்] திருநாவுக்கரசு நாயனார் திருவையாற்றில் கயிலைக் காட்சியைக் கண்டு மகிழ்ந்து அதன் பின்னர் அங்கு தங்கியிருந்த காலத்துப் பாடியருளிய பல திருப்பாசுரங்களில் இதுவும் ஒன்றாகும். இறைவனது அருட்குணங்களும் அருட்செயல்களும் இதில் முன்னிலைப் பரவலாக ஓதப்பட்டுள்ளன.

தொழிற்படாது வானின்கண் சூக்கும நிலையில் உள்ள நாதம் ஓசை என்றும் அது தொழிற்பட்டுப் பரந்து சென்று செவிக்குப் புலனாகுங்கால் ஒலியென்றும் கூறப்படும். அசைவின்றி நிற்கும் நீர்நிலையைப் போன்றது

ஓசை என்றால், அந்நீர் வேறு பொருளோடு உராயுங்கால் தோன்றும் அலைபோன்றது என்று கூறலாம். இங்ஙனம் கூறியதால் இறைவனது அருவத்தன்மையையும் உருவத்தன்மையையும் நினைவுபடுத்தியதுமாகும். முப்பத்தாறு தத்துவங்களில் ஒன்றாகிய ஒலியைக் கூறினமையின், உபலக்கணத்தால் இறைவன் ஏனையதத்துவங்களுமாக உள்ளான் என்பது பெறப்படும். உலகிற்கு ஒருவன் என்பது உலகினைத் தொழிற்படுத்தும் நிமித்தகாரணமாகிய கருத்தா இறைவன் என்பதைக் குறிக்கும்.

இயற்கைக் காட்சியிற் காணும் எழில் மிகு பொருள்கள் யாவற்றுள்ளும் இறைவன் நீக்கமற நிறைந்து தோன்றுகிறான் என்பதை 'வாசமலரெல்லாம் ஆனாய் நீயே' என்று கூறினார். இனி, மலரும் அதனின் வேறன்றாய் எண்ணப்படும் மணமும் போல யாங்கணும் வியாபகமாய் முதல்வன் திருவருள் உயிர்களின் வேற்றுமையின்றி நிற்பது என்று கூறுதலுமொன்று.

இறைவன் மனவாசகங்கடந்த பரம்பொருளாயினும் மக்கட்கு உலகியலை அறிவுறுத்துவான் வேண்டி மலையரையன் மகளாகிய பருவதவர்த்தனியை மணந்து மலையானுக்கு மருமகனாய் வந்து தோன்றினான். இறைவன் மென்மையும் நொய்மையும் உடையமலருமானான், அவனே திண்மையும் பருமையுமுடைய மலையினது அரசனுக்கு மருகனுமானான் என்ற நயங்காண்க.

இறைவனுடைய புகழைப் பேசுந்தொறும் பேசுந்தொறும் அடியவர்க்கு அவன் வற்றாத பேரின்ப ஊற்றினனாக உள்ளான். அவன் புகழைப் பாடாத நாளெல்லாம் பிறவியின் பயனை அடையாத நாளாகக் கருதப்படும்.

திருநல்லூரிலே இறைவன் தோன்றி அப்பமூர்த்தியின் சிரசின் மேல் தம்முடைய திருவடிகளைச் சூட்டியருளினார். இதனை 'திருவடி எம்தலைமேல் வைத்தார் நல்லூர் எம்பெருமானார் நல்லவாறே' என்று நாயனாரே குறிப்பிட்டுள்ளார். இவ்வரலாறு அப்பர் திருவடி தீக்கை பெற்றதைக் குறிக்கும். சரியை கிரியை யோகங்களையும் ஞான நூல் விசாரணையுமுடையவர்க்கே இறைவன் குருவாக வந்து பரஞானத்தை உணர்த்துவான் என்று சைவசாத்திரங் கூறும்.

பகலெல்லாம் வெயில் செய்யும் ஞாயிறும், இரவில் ஒளிசெய்யும் திங்களும் உடுக்கடு விளக்கம் எனப்பட்டன, இவை இறைவனால் ஒளியூட்டப்பட்டன வாயினும் தேசங்களில் மாறி மாறி வருந்தன்மையன, திருவையாற்றில் தோன்றியுள்ள பேரொளிப் பிழம்பாகிய இறைவனே யாண்டும் எக்காலத்தும் ஒளி தந்து நிற்றலின் அவனை 'அகலாத சோதி' என்றார்.

# சமயப் பெரியார் அறவுரைகள்

[திரு. க. வடிவேலாயுதம், எம்.ஏ.,]

உலகிலே உள்ள உயிர்களெல்லாம் இன்பத்தையே விரும்புகின்றன. ஆனால் அவை விரும்புகின்ற இன்பம் எளிதாகக் கிடைப்பதில்லை. சில வேளையில் இன்பத்தையடைய விரும்பித் துன்பத்தை உயிர்கள் அடைகின்றன. இதைக் கணியன்பூங்குன்றனார் என்ற புறநானூற்றுப் புலவர், "தீதும் நன்றும் பிறர் தரவாரா" என்ற அடியால் விளக்கியுள்ளார். அதன்படி தீமையும் நன்மையும் பிறரால் வருவன அல்ல. அவரவருடைய செயல்களாலேயே விளைகின்றன. அதற்கு யாரையும் நோவதில் பயனில்லை என்பது விரிவான பொருளாகும். இக் கருத்தையே வள்ளுவப் பெருந்தகையும்,

பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக்கல்

[மக்கள் அடையும் பெருமைக்கும் மற்றையச் சிறுமைக்கும் தாம் தாம் செய்யும் செயல்களே உரைகல்லாகும். வேறில்லை] என்று தெளிவாக விளக்கியுள்ளார். இவை போன்ற வினாக்களுக்கு விளக்கம் அளிப்பனவே சமய நூல்களாம்.

சமயம் என்பது மனிதன் மனிதனாக வாழ ஒவ்வொரு நாட்டிலும் சான்றோர் காட்டிய நெறியாகும். எப்படிக் காட்டிலே போகின்றவனுக்கு ஒரு பாதையிருந்தால் ஒழுங்காகச் செல்ல முடியுமோ அதைப்போல மக்கள் அனைவரும் உலக துன்பங்களுக்கிடையிலே விலங்கினைப் போல் வாழாமல் சில கட்டு திட்டங்களோடு வாழக் கற்றுக் கொடுக்கின்றது சமயம். இந்த உண்மையைப் பேராசிரியர் சுந்தரம்பிள்ளையவர்கள் தாம் எழுதிய மனோன்மணீய நாடகத்தில், 'சிவகாமி சரிதம்' என்ற கிளைக் கதையிலே உட்கருத்தோடு தெளிவு படுத்தியுள்ளார். ஆண்வேடந் தாங்கிய சிவகாமி என்ற பெண் காட்டு வழியிலே தான் எதிர்ப்பட்ட சிதம்பரன் என்ற முனிவரை நோக்கி,

'பாழடவி இதிற் சுழன்று பாதை விடுத்தலையும்
பாவி யொருவனையளித்த பலனுறுவை பெரிதே'

என்று இருபொருள் படக் கூறியிருப்பது இந்த உண்மையை விளக்குவதாக அமைந்துள்ளது.

சமயத்தை முற்காலச் சான்றோர் நெறி என்ற சொல்லாலே குறித்தனர். "நாஅல் வேதநெறி திரியினும்" (புறம் 2) என்ற வழக்கு இதனைத் தெளிவுபடுத்தும்; பிற்காலச் சான்றோர் இராமலிங்க அடிகளாரும், "பெருநெறி பிடித்தொழுக வேண்டும்" என்று கூறியிருத்தலும் ஈண்டு நினைவு கூர்தற்குரியது.

புறநானூற்றுப் புலவர் நரிவெரூஉத் தலையார் பொருண் மொழிக் காஞ்சித் துறையில் உலக மக்களுக்குக் கூறியுள்ள அறவுரை போற்றுதற்குரியதாகவுள்ளது. அவ்வறவுரை எல்லாச் சமயங்களுக்கும் அடித்தள

மாக அமைந்துள்ளது என்று கூறினல் அது மிகையாகாது. அதுவும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இவ்வறவுரை எழுந்தது எனில் அதனை நாம் வியவாமல் இருக்க முடியாது. இனி அவ்வறவுரையினைக் காண்போம்.

'நல்லது செய்த லாற்றி ராயினும்
அல்லது செய்த லோம்பு மினது தான்
எல்லாரு முவப்ப தன்றியும்
நல்லாற்றுப் படுஉ நெறியுமாறதுவே'

(புறம் 195.)

[நல் வினையைச் செய்ய மாட்டீராயினும் தீவினையைச் செய்தலை நீக்குங்கள். அதுதான் யாவரும் புகழ்வதற்குரியதன்றியும் நன்னெறியிற் செலுத்தும் வழியும் அதுதான்]

இவ்வறவுரை மக்கட் சமுதாயம் தவறின்றி வாழ அவர் விடுத்த வேண்டுகோள் என்று தெளிவாகக் கூறலாம். இவ்வறிவுரை இன்றைய உலகினுக்கு மிக இன்றியமையாதது. அரக்கப் பண்பு என்பது பிறருக்குத் தீமை செய்வதற்கே பெயராக வமைந்தது. தீமை செய்யாமலிருப்பதே எல்லா அறங்களுக்கும் வித்தாகும் என்ற உண்மையினைத் தெளிந்து சுருங்க உரைத்த அப்பெருந்தகையார் திறத்தினை எவ்வாறு போற்றுவது என்றே தெரியவில்லை.

அடுத்து முத்தமிழ்க் காப்பியத்தையியற்றி வித்தகராகத் திகழ்கின்ற இளங்கோவடிகள் தம் காப்பியத்தின் இறுதிக்காதையிலே உலக மக்களுக்கு விடுத்த செய்தி யாவரும் எக்காலத்தும் போற்றுவதற்குரிய அறவுரையாக அமைந்துள்ளது. அதனை எல்லா சமயத்தவரும் பின்பற்றி உய்தி பெறலாம்.

"தெய்வந் தெளிமின் தெளிந்தோர்ப் பேணுமின்
பொய்யுரை அஞ்சுமின் புறஞ்சொல் போற்றுமின்
ஊனூண் துறமின் உயிர்க்கொலை நீங்குமின்
தானஞ் செய்ம்மின் தவம்பலதாங்குமின்
செய்ந்நன்றி கொல்லன்மின் தீ நட்பிகழ்மின்
பொய்க்கரி போகன்மின் பொருண்மொழி நீங்கன்மின்"

என்று தொடங்கிக் கூறியுள்ள அறவுரைகள் எக்காலத்திற்கும் பொதுவாக உள்ளமை நினைந்து இன்புறத் தக்கது.

நெறிகள் உலகின்கண்பலவுள்ளன. அவற்றுள் சைவநெறியும் வைணவ நெறியும் பாரதத்தின் கண் தலை சிறந்த சமயங்களாகத் திகழ்கின்றன. இவற்றைப் பொதுவாக இந்து சமயம் என்ற சொல்லாலே குறிப்பிடுவர்.

சைவ நெறியைப் பின்பற்றிய அடியார்கள் பலருள்ளே அறுபத்து மூவரை ஆன்ஞேர் சிறப்பித்துக் கூறுவர். அவருள்ளும் நூல் செய்தோர் சிலரே. அவர்களுள்ளே காலத்தால் முற்பட்டவர் காரைக்கால் அம்மையார் ஆவார். இறைவனுலே 'அம்மையே' என்று அழைக்கப்

பெற்றபேறுபெற்றவர். அவர் அருளிய பதிகங்கள் மூத்த திருப்பதிகங்கள் என்று போற்றப்படுகின்றன. அம்மையாருடைய நூல்கள் தேவாரத் திற்கு முந்தியவை.

அவர் இயற்றிய திருவிரட்டைமணிமாலை என்ற நூலுள் ஒரு பாட்டில் நெஞ்சுக்கு அறிவுரை கூறுமுகமாக, பழவினைகள் ஒருவரை வந்து துன்புறுத்துவதற்குமுன் திருநீறு அணிந்த சிவபெருமானைக் கூற்றுவன் பயம் நீங்க நினைக்க வேண்டுமென்று கூறுகிறார்.

தொல்லை வினைவந்து சூழாமுன் தாழாமே
ஒல்லை வணங்கி உமையென்னும்-மெல்லியலோர்
கூற்றானை கூற்றுருவங் காய்ந்தானை வாய்ந்திலங்கு
நீற்றானை நெஞ்சே நினை.

பின் வணங்குதல் கூடாமையின் சூழாமுன் வணங்கின் வினையை வெல்லலாம் என்பது கருத்து. காரைக்கால் அம்மையார் அருளிய அற்புதத் திருவந்தாதி மற்றொரு அருள் சுரக்கும் பெட்டகமாகத் திகழ்கிறது.

எனக்கினிய எம்மானை ஈசனை யான் என்றும்
மனக்கினிய வைப்பாக வைத்தேன்—எனக்கவனைக்
கொண்டேன் பிரானாகக் கொள்வதுமே இன்புற்றேன்
உண்டே எனக்கரிய தொன்று.

[எனக்கு இனியவனாகிய ஈசனை நான் எந்நாளும் மனத்துக்கினிய நிதியாக வைத்தேன். எனக்கு அச்சிவபிரானைக் கடவுளாகவும் கொண்டேன். கொள்ளுதலும் இன்பமடைந்தேன். இனி எனக்கு அரிய பொருள் ஒன்றுமில்லை.] மேலான பொருளை யடைந்து வீட்டின்பம் எய்திய எமக்கு விரும்பியடையும் அரிய பொருள் ஒன்றுமில்லை என்பது திரண்ட கருத்து.

காரைக்கால் அம்மையாரை அடுத்து நால்வர் பெருமக்களாகிய சான்றோர் அருளிய அருளுரைகள் பலவாகும். அவற்றுள் சிலவற்றை ஆய்ந்து இக்கட்டுரையை முடிக்கலாம்.

ஞானசம்பந்தர்வாக்கு வேதத்திற்கு ஒப்பாகக் கருதத்தக்கது. இறைவனை அன்பினாலே பற்ற முடியுமே தவிர ஆராய்ச்சியால் அடைய முடியாது என்ற கருத்தைப் பின் வரும் பாடல்களால் விளக்குகிறார்.

ஆட்பாலவர்க்கருளும் வண்ணமும் ஆதிமாண்பும்
கேட்பான் புகிலளவில்லை கிளக்க வேண்டா
கோட்பாலனவும் வினையும் குறுகாமை எந்தை
தாட்பால் வணங்கித் தலைநின்றிவை கேட்கதக்கார்.

[மனிதர்காள்! இறைவன் தன் அடியவர்களுக்கு அருள்செய்யும் நிலைகள் பல. அவனது மாண்பும் பல. ஆகவே அவற்றைப்பற்றி யாம் யாதொன்

றும் கேட்டல் கூடாது, பேசவும் கூடாது. ஆனல் அப்படிக் கேட்கத் தக்கவர் எவரேனும் உளரோ எனின் அவனது திருவடிகளை வணங்கிப் போற்றுகின்றவரே பேசக் கூடியவர்கள்.]

ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர்விட்டுளன் எங்கள் சோதி
மாதுக்கம் நீங்கல் உறுவீர் மனம் பற்றி வாழ்மின்
சாதுக்கள் மிக்கீர் இறையே வந்து சார்மின்களே.

[சாதுக்களே, நம் இறைவனைக் காரண காரிய வகைகளைக் கொண்டும், எடுத்துக் காட்டும் மொழிகளாலும் சோதிக்க வேண்டா. அவன் ஒளி வடிவினன். நீங்கள் அவனை உம்மனத்தில் தியானம் செய்து வாழுங்கள். உங்கள் துயரம் தீரும். விரைவில் அவனைப் பற்றுங்கள்.]

நால்வருள்ளே நாவுக்கரசர்வாக்கு மிகச் செம்மையுடையது. "சொற் குறுதிக்கு அப்பரெனச் சொல்" என்ற வாக்கு இதை மெய்ப்பிக்கும். உலகக் கட்டுள் இருந்து துன்பப்படாமல் இறைவனை நினைந்தால் உய்ய வழியுண்டு என்பதை,

'மனைவி தாய் தந்தை மக்கள் மற்றுள்ள சுற்றம் என்னும்
வினையுளே விழுந்து அழுந்தி வேதனைக்கு இடம் ஆகாதே
கனையுமா கடல் சூழ் நாகை மன்னுகா ரோணத்தானை
நினையுமா வல்லீராகில் உய்யலாம் நெஞ்சில் நீரே.

அப்பரடிகள் அறவுரைகள் பலவாகும். 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்பது அவரது வாழ்க்கையின் குறிக்கோளாகும். மற்றுமோர் இடத்தில் வாக்கின்வேந்தர் மக்கள் செம்மையாக நடக்க வேண்டியதன் அவசியத்தைப் பின் வருமாறு வலியுறுத்தியுள்ளார்.

தொழுது தூமலர் தூவித் துதித்து நின்று
அழுதுகாமுற்று அரற்றுகின்றாரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப்பாரையும்
எழுதும் கீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசனே.

[அந்தத் திருஇன்னம்பர் ஈசனை எளியன் என்று எண்ணி விடாதீர். நம் தினசரிச் செயல்களைக் கவனித்து வருபவன் ஆவான். தன் இணையடிகளை வணங்கி நல்ல மலர் கொண்டு அர்ச்சித்து, துதித்து நின்று அன்பு கொண்டு வாழ்பவரையும், காலத்தை வீணே கழித்து மேலே கூறப்பட்ட நற்செயல்களை எள்ளி நகையாடுபவரையும் குறித்துக் கொண்டு வருபவனாவான்].

ஆளுடைய நம்பிகள் என்றழைக்கப்படும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் பல அறவுரைகளைத் தம் திருப்பாட்டில் கூறியுள்ளார். திருக்கேதாரத்தில் உள்ள இறைவனை வழிபட்டு, பெண்டிர் வலையிலே அகப்படாது, இயமன் வருமுன் பிழையுங்கள் என்று கூறுவது நினைந்து இன்புறத் தக்கது.

[தொடர்சி 32-ஆம் பக்கம்]




## பெரியாழ்வார்

[வித்துவான் திரு. கா. அ. மணவாளன், பி.ஏ., பி.ஓ.எல்.,]

பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தானென்
றீண்டிய சங்கமெடுத்தூத—வேண்டிய
வேதங்க ளோதி விரைந்து கிழியறுத்தான்
பாதங்கள் யாமுடைய பற்று.

தமிழ் முனிவராகிய அகத்தியருக்கும் தமிழ்ச்சங்கம் வளர்த்த அரசர்கட்கும், புலவர்கட்கும் உறைவிடமாய்ச் சிறப்புற்றதும், செந்தமிழ்நாடு என்று போற்றப்படுவதுமாகிய பாண்டிவள நாட்டிலே ஸ்ரீ வில்லிப்புத்தூர் என்றொரு பட்டினம் உண்டு. வேதவாய்த் தொழிலார்கள் வாழும் அவ்வில்லிப்புத்தூரில் வேயர் குடியில் தோன்றியவரான முகுந்த பட்டருக்குப் பதுமை என்பாளிடம் தோன்றியவரே பெரியாழ்வார். ஆனிமாதத்துச் சுவாதி நக்ஷத்திரத்தில் பிறந்தருளிய ஆழ்வார் இளமை தொட்டே அங்குள்ள வடபெருங்கோயிலுடையானிடம் பெரும் பக்தி பூண்டு ஒழுகலானர். ஆதலால் திருமாலுக்கு ஏதேனும் தம்மாலியன்ற திருத்தொண்டினைச் செய்ய வேண்டுமென்று எண்ணினர்.

இவ்விதம் ஆலோசித்து வருகையில், முன்பு கோகுலத்திலிருந்து வடமதுரைக்குச் சென்ற கண்ணபிரான், கம்சனுக்குப் பணிசெய்தவரான மாலாகாரருடைய வீட்டுக்கு எழுந்தருளினதும், அம்மாலாகாரர் என்னும் மாலை விற்பவர், எதிர்பாராது தம்முடைய குடிலுக்கு வந்துத் தம்மையாட்கொண்ட கண்ணனுக்குத் தாம் தொடுத்த மாலையை அணிவித்து, நாள் மலரால் அருச்சனை செய்து வழிபட்டுப் பெரும் பேறு பெற்றதுமாகிய நிகழ்ச்சிகளை நினைத்தார். அக்கண்ணனே வடபெருங்கோயிலுடையானாகத் தம்மூர் கோவிலிலே எழுந்தருளியுள்ளான் என்பதையும் உணர்ந்தார். அவ்வெம்பெருமானுக்கு நறுமணமுள்ள மாலைகளைச் சாத்தி மலர் கொண்டு அருச்சிக்க விரும்பினர். உடனே தேவலோகத்துத் திருநந்தவனமும் தோற்கும்படி மிகப் பெரிய பூந்தோட்டத்தை அமைத்து, திருக்குளங்களையும் ஏற்படுத்தி "நாட்கமழ் பூம்பொழில்" என்கிறபடியே மிகவும் பரிமளமான பூந்துளவம், செந்தாமரை, வெண்டாமரை, செங்கழுநீர், நீலோற்பலம், மல்லிகை, முல்லை முதலிய பூக்கள் மலிந்து பொலியும்படி திருநந்தவனத்தைத் திருத்தினர். நாள்தோறும் அதிகாலையில் எழுந்து நீராடிப் பின்பு திருமண் காப்பு இட்டுக்கொண்டுத் தமது மூக்கில் மலர்களின் மணம் ஏறுதபடி

திருப்பரிவட்டத்தால் தம் மூக்கையும், வாயையும் கட்டிக் கொண்டு மலர்களைக் கொய்துவந்து பலவகையான மாலைகளைக் கட்டியும், திருத் துழாய்களைச் சேர்த்தும் வடபெருங்கோயிலுடையனுக்குச் சாத்தி மகிழ்ந்து வரலானார். இவ்விதம் பெரியாழ்வார் திருநந்தவனத் தொண்டில் ஈடுபட்டிருக்கையில் அக்காலத்தில் மதுரையை ஆண்டுவந்த பாண்டிய அரசனான ஸ்ரீ வல்லபதேவன் என்பவன், மாற்றுவடிவில் இரவு சோதனை செய்து வரும்போது ஒருதிண்ணையில் வெளியூர் அந்தணர் ஒருவர் படுத்துறங்குவதைக் கண்டான். அவரை எழுப்பி இன்னாரென்று அறிந்து, அவருடன் பேசியபொழுது அவர் ஒரு வேதாந்தியாய் விளங்கினமையாலே அவரைத் தம்முடைய அரண்மனையில் தங்கவைத்து உபசரித்து மிகவும் உயர்ந்த தத்துவார்த்தங்களைக் கேட்டு மகிழ்ந்தான். முடிவில் அரசன் மேற்கொள்ள வேண்டிய ஒரு நீதியையும் அவர்கற்பித்தார். அதாவது "மழைக் காலத்துக்கு வேண்டுபவற்றுக்கு மற்ற எட்டு மாதங்களிலும், இரவுக்கு வேண்டுபவற்றுக்குப் பகலிலும், முதுமைக்கு வேண்டுபவற்றுக்கு இளமையிலும், மறுமைக்கு வேண்டுபவற்றுக்கு இம்மையிலும் ஒருவன் முயலக்கடவன்" என்னும் கருத்தை கூறினான். அதைக்கேட்ட அரசன் இம்மையில் பல்லாற்றானும் சிறப்புற்றிருப்பதால் ஒரு குறையும் இல்லாமையாலே, மறுமைக்கு வேண்டிய முயற்சியை இம்மையில் செய்ய வேண்டுமென்று எண்ணினான்.

மறுநாள் புரோகிதனான செல்வநம்பியை அழைத்துக்கேட்டபொழுது அவன் வித்துவான்களைக் கூட்டிச் சபை நடத்தி விவாதம் செய்தால், இவ்வுலகில் மேலான தத்துவம் இன்னது என்பது வெளிப்படும். அப்படி வாதப்போர் நடத்தி அதில் பரம் பொருளை நிலைநாட்டவல்லவர்க்கு "பொற்காசுகளைக் கொண்ட கிழி" அளிக்கப்படும் என்று பறை சாற்ற வேண்டும் என்று கூறினான். பாண்டியனும் அவ்வாறே தன் நாட்டிலும், பிறர் நாட்டிலும் பறை சாற்றி இவ்வுலகில் யாவரும் பின் பற்ற வேண்டிய மேலான பரம்பொருளைக் காரணகாரியங்களுடன் விளக்கமாகப் பேசி உணர்த்தவல்ல அறிஞர்களைக் கொண்ட அவையைக் கூட்டினான். திருமாலடியவரான செல்வ நம்பியும் வடபெருங்கோயிலுடையானிடம் சென்று விண்ணப்பம் செய்து "நின்னருளே பார்த்திருப்பேன்" என்று வேண்டினார். அதன் பின்பு அப்பெருமானும் தம்மிடம் ஆழ்ந்த பக்தியுடையவரான பெரியாழ்வார் கனவிலே தோன்றி "நீர் நாளைப் பாண்டியன் அவைக்குச் சென்றுப் பரம் பொருளை நிலைநாட்டிப் பொற்கிழியை அறுத்துவாரும்" என்று கட்டளையிட்டார். ஆழ்வாரும் உடனே விழித்தெழுந்து "நலங்களாய நற்கலைகள்" நவின்றிலாத அடியேன் சென்று திருநந்தவனத்தில் பணிசெய்ய வைத்துள்ள மண் வெட்டியைக் காட்டி அப்பொற்கிழியை அறுக்க முடியுமோ என்று விண்ணப்பித்தார். இறைவனும் ஆழ்வாரைப் பார்த்து "உமக்கு அக்கவலைவேண்டா; நாமே வாதிடவருவோம்" என்று அருளிச் செய்தார்.

மறுநாட்காலை கோவிலிலிருந்து திருப்பல்லக்கு, திருவெண்கொற்றக் குடை, வெண்சாமரை, திருச்சின்னம் முதலிய விருதுகளோடு கோவில் அதிகாரிகளும் வந்து ஆழ்வாரைத் தண்டனிட்டு பல்லக்கில் அமரச் செய்து கோவிலுக்கு அழைத்துப் போனார்கள். ஆழ்வாரும் பெருமானை வணங்கி வழிபட்டு நின்றார். அப்பொழுது பெருமான் ஆழ்வாரைக் குளிர நோக்கி ஞான ஒளியை அருளினார். ஆழ்வாரும் அதுவே காரணமாகச் சீரிய சிங்கம் போலே கிளம்பி, அடியார்கள் புடைசூழ மதுரைமாநகருக்கு வாதிடப்புறப்பட்டார். தந்நகர் வந்த ஆழ்வாரை அரசனும் செல்வநம்பியும் வரவேற்று ஆசனத்தில் அமரச்செய்தனர். பல்வேறு நாட்டு அறிஞர்களும் சபையில் கூடியிருந்தனர். வித்து வான்கள் பலரும் தங்கள் கொள்கைகளைத் தக்க சான்றுகளுடன் நிறுவி வாதிட்டனர். நம்பெரியாழ்வாரும் முதலில் வேதத்தில் தொடங்கிப் பின் வேதவிரிவாய்த் தோன்றிய உபநிடதங்களிலிருந்தும், இதிகாச புராணங்களிலிருந்தும் மேற்கோள்களைக் காட்டி "எவனிடமிருந்து உடலும் உயிரும் இயங்கு பொருளும் இயங்காப்பொருளும் உண்டா கின்றனவோ, எவனால் இவையாவும் நிலைபெற்றிருக்கின்றனவோ, முடிவில் எவனிடத்தில் இவையாவும் கலக்கின்றனவோ, அவனே பரம் பொருள்" என்றும் அவன்தான் செல்வநாரணன், திருநாரணன் என்று வழங்கும் திருமாலான பரம்பொருள் என்றும் அறுதியிட்டுக் கண்ணன் அல்லால் தெய்வமில்லையாதலால் நாமும் சொன்னோம், நமரும் சொல்மின் என்றார். அப்பொழுது பரிசாகக் கட்டியிருந்த பொற் கிழியும் தானே தாழவளைந்து அவர் திருக்கையைத் தீண்ட, உடனே ஆழ்வாரும் விரைந்து பொற்கிழியை அறுத்தருளினார். அதைக் கண்டு யாவரும் மகிழ்ந்தனர். வாதிட்ட பரசமயவாதிகளும் ஆழ்வாரைத் தழுவி "வேதாந்தவிழுப்பொருளின் மேலிருந்த விளக்கை விட்டுசித்தன் விரித்தனன்" என்று மிகவும் கொண்டாடினர். ஸ்ரீ வல்லபதேவனான பாண்டியனும், பண்டிதர்களுக்கெல்லாம் தலைவராய் விளங்கிய காரணத் தால் ஆழ்வாருக்குப் பட்டர்பிரான் என்று பட்டம் சூட்டினான். பின்புத் தன் பட்டத்து யானையின் மீது அமர்த்தித்தானே வெண்சாமரை வீசினான். "வேதப்பயன் கொள்ளவல்ல விட்டுசித்தர் வந்தார் என்றும்" வில்லிப்புத்தூர் வேதக்கோன்வந்தாரென்றும் விருதுகளூதித் திருச் சின்னம் பரிமாற, சங்கமெடுத்தூதிப் பல்லாயிரவர் பின் தொடர மதுரை மாநகரப்பெருவீதிகளின் வழியே ஊர்வலமாக அழைத்து வரப்பட்டார். அப்பொழுது மைந்தனது பெருமையைக் காணவரும் தந்தை போலே வடபெருங்கோயிலுடையனான திருமால் திருவாழி திருச்சங்குடனே தமது பிராட்டிமார் சூழக் கருடவாகனத்தின் மேல் வந்து காட்சி தந்து ஆழ்வாரை ஆட்கொண்டருளினார்.

ஆழ்வாரும் அந்த எம்பெருமானாகிற பெருமானையும், பிராட்டியையும் வணங்கி, கருடவாகனத்தில் காட்சிதரும் அப்பெருமாளின் அழகுக்குக் கண் எச்சில் (திருட்டிதோடம்) வாராதிருக்க வேண்டுமென்று எண்ணித் தான் அமர்த்திருந்த யானைக் கழுத்திற்கிடந்த மணியையே தாளமாகக்

கொண்டு தன்னை மறந்து திருப்பல்லாண்டு பாடி வாழ்த்தியருளினர். மற்றைய ஆழ்வார்களுக்கும் இவர்க்கும் மிகுந்த வேற்றுமை உண்டு. மற்றவர்கள் எம்பெருமானை அடைந்து தங்களுக்குப் பலவரங்களை அருளவேண்டுமென்று கேட்பதோடன்றித்தங்களுடைய ஆபத்துக்களை யும் போக்கிக்காக்க வேண்டுமென்று வேண்டுவர். இவர் அவ்விதம் மின்றி மற்றவர்களால் பெருமாளுக்கு என்ன தீங்கு வருமோ என்று அஞ்சி, அவனுக்குத் தீங்கு வாரா வண்ணம் பல்லாண்டு பாடினராத லால் இவர் அந்தப் பக்தர்களினும் வேறுபட்டுப் பெருமைபெறுகிறார். ஆதலால் பெரியாழ்வார் என்னும் பெயரையும் பெற்றுச் சிறப்புற்றார். இக்கருத்தை நம் மணவாள மாமுனிவன் வாக்கால் நன்கு அறியலாம்.

மங்களா சாசனத்தின் மற்றுள்ள வாழ்வார்கள்
தங்களார் வத்தளவு தானன்றிப்—பொங்கும்
பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் பெற்றான்
பெரியாழ்வா ரென்னும் பெயர்.

இவ்விதம் பரம்பொருளை உலகறியக் காட்டிய பெரியாழ்வார் ஸ்ரீ வில்லி புத்தூருக்கு எழுந்தருளி தாம் கொண்டு வந்த பொற்கிழிப் பொருளனைத் தையும், வடபெருங்கோயிலுடையான் கோபுரத்திருப்பணிக்கே செல விட்டு அதை ஸ்ரீ வல்லபதேவன் திருப்பணி என்றே கல்நாட்டிப் பின்பு தமது திருநந்தவனத்தில் புதிய மலர்ச் செடிகளையும், திருத்துக்குழாய்ச் செடிகளையும் மேலும் பயிரிட்டு அவ்வெம்பெருமான் தொண்டிலே ஈடு பட்டார். கண்ணன் பிறந்த நாளையும் அவன் திருவிளையாடல்களையும் பக்தியோடு கொண்டாடி வரும் பெரியாழ்வாருக்கு அக்கண்ணனின் பிள்ளைப் பிராயச் செயல்களையெல்லாம் ஒரு பிரபந்தமாகப் பாடவேண்டு மென்றே விருப்பம் உண்டாகியது. அவ்விருப்பம் மேலோங்கிடவே கண்ணபிரானைக் குழந்தையாகக் கற்பனை செய்துகொண்டு அக்குழந்தை யின் பிறப்பையும் வளர்ச்சியையும் மிகவும் அழகாகப் பாடியுள்ளார். "பெரியாழ்வார் திருமொழி" என்னும் இப்பிரபந்தமே தமிழகத்தில் மற்ற பிள்ளைத் தமிழ் நூல்களுக்கெல்லாம் முன்னோடி என்று ஆய்ந் தோர் கூறுவர். பெரியாழ்வார் திருமொழியில் மொத்தம் 440 பாட்டு கள் உள்ளன. இதைத்தவிர திருப்பல்லாண்டு என்ற தலைப்பில் இவரால் பன்னிரண்டு பாடல்களும் இயற்றப்பட்டுள்ளன. இவ்வாறு பரமனுக்கும் பல்லாண்டு பாடிய இவ்வாழ்வார் பெருமையைக் கீழ்வரும் பாட்டால் நன்கு உணரலாம்.

உண்டோதிருப் பல்லாண்டுக்கு ஒப்பதோர் கலைதான்
உண்டோ பெரியாழ்வார்க் கொப்பொருவர்—தண்டமிழ்நூல்
செய்தருளு மாழ்வார்கள் தம்மில் அவர் செய்கலையில்
பைதல் நெஞ் சேநீயுணர்ந்து பார்.

—:0:—




## அறிவு இயற்கையா? செயற்கையா? இரண்டுமா?

[வித்துவான் திரு வை. இரத்தினசபாபதி, எம்.ஏ., பி.ஓ.எல்.,]

அறிவைப் பற்றிப் பல சுவையான செய்திகள் உண்டு. 'வாழ்க்கை' என்ற நெடும்பயணத்தில் நாள்தோறும் நாம் சந்திக்கின்ற மக்கள் தம்மை அறிவுடையவர்கள் என்று நிலைநாட்டுவதற்கு எவ்வளவோ பாடுபடுகிறார்கள். அதுமட்டுமா! பிறரை அறிவு இல்லாதவர்கள் என்று பறைசாற்றுவதற்கு அடுக்கடுக்காக முயற்சிக்கிறார்கள் என்பதும் கண்கூடு. உயர்நிலையில் இருப்பவர்கள் சிலர் மற்றவர்களை 'அறிவில்லாதவன்' என்றே கூறுகிறார்கள். நாகரிக உலகில் பலகலைகளையும் உணர்ந்தவர்களாக உள்ளவர்கள் சிலர் 'அறிவில்லாதவன்' எனத் திட்டுவது விஞ்ஞான முறைபடி தவறு என்று எண்ணி "அறிவு தொழிற்படவில்லை" என்று கூறி வசைமாரி பொழிவதையும் நாம் இல்லையென்று சொல்ல முடியாது.

வாழ்க்கையோடு சம்பந்தப்பட்ட சில பிரச்சினைகளைக் கூட, நாம் ஏதோ தெரிந்து வைத்திருக்கிறோம் என்று கூறலாமேயொழிய, நேரடியான வினாக்கள் சிலவற்றை எழுப்பினால் நாம் நேரான விடைகளைக் கூற முடியாதவர்களாக நிற்போம் எனல் உறுதி. எடுத்துக் காட்டாக 'ஒழுக்கம்' என்ற சொல், அது தரும் பொருள் ஆகியவை மனிதர்களுக்குப் புதியவை அல்ல; நாள்தோறும் பழகித் தேர்ந்தவைகளே. எனினும் ஒழுக்கம் என்றால் என்ன? என்ற ஒரு வினாவை அமைத்து, நேரான விடை தேவை என்றால் உடனே எளிதிற் சொல்லிவிட முடியாது. நல்லொழுக்கம், தீயொழுக்கம் என்று வரையறைப் படுத்திக் காட்டிய திருவள்ளுவரே, 'ஒழுக்கம் விழுப்பம் தருவது' என்று கூறினாரேயன்றி இன்னது என இலக்கணம் கூறி விளக்கவில்லை என்று கூறிச் சமாளிப்பதை நாம் காணலாம். அவ்வாறே அறிவு எது? என்ற வினாவை எழுப்பினால் இன்னது என்று வரையறைப் படுத்தி உடனே சொல்லிவிட முடியாது.

அறிவைப் பற்றிய பல செய்திகளை இணைத்து வரையறைப் படுத்தி நாம் அறிதல் வேண்டும். அறிவாராய்ச்சியானது பொருளாராய்ச்சியோடு இணைந்தது என்பது உண்மையே. ஆயினும் அறிவைப் பற்றிய தனித்த உண்மைகள் சிலவற்றையும் நாம் தெரிந்து கொள்ளுதல் வேண்டும்.

மெய்ப் பொருளியல் மேலைநாட்டிலாயினும் சரி, கீழைநாட்டிலாயினும் சரி. முதன்முதலாக ஆராய முற்படுவது அறிவைப் பற்றி எழும் சிக்கல்களைத்தான். பொதுவாக Philosophy என்ற சொல்லே (Love of wisdom) அறிவின் மேலெழு ஆய்வுகள் என்றே பொருள்படுகிறது. தத்துவம் என்று சொன்னவுடனேயே பலரும் நினைப்பது கடவுளை அல்லது சமயத்தை நிலைநிறுத்தப் பாடுபடும் ஒரு துறை என்பது தான். உண்மையில் அதன் பணி அன்று மனிதனுக்கு மிகவும் தேவையாகிய வாழ்வியற் பிரச்சினைகளை முறையாக ஆராய்ந்து விளக்கம் சொல்வதுதான் தத்துவத்துறை அல்லது மெய்பொருளியல். மனிதனின் வாழ்வியற் பிரச்சினைகளில் கடவுளும் வந்து போவதால் பல ஆய்வுகளுள் ஒன்ருக, கடவுளைப் பற்றிய ஆய்வும் வந்து போகிறது.

உலகம் என்பது "முதல் ஏட்டையும் கடைசி ஏட்டையும் இழந்த ஒரு கையேடு" என ஒப்புமை காட்டினுன் ஒரு பாரசீகப் புலவன். இழந்து போன ஏடுகளைத் தேட முயன்றபோது கிடைத்த முடிவுகளே 'தத்துவங்கள்' அல்லது 'மெய்ப்பொருளியல் விளக்கங்கள்' என்பது சான்ருேர் முடிவு.

"எந்த ஒன்றை அறிந்தால் எல்லாவற்றையும் அறிந்ததாக ஆகுமோ, எந்த ஒன்றை அறியவில்லையானுல் எவ்வளவு அறிந்திருந்தாலும் பயனில்லையோ, அந்த ஒன்று எது? என்ற ஒரு வினவை நாம் உபநிடத வரலாற்றிற் காண்கிருேம். எனவே தத்துவ இயல் அல்லது மெய்ப் பொருளியல் என்பது மனித வாழ்க்கையின் அன்ருடப் பிரச்சினைகளை நடுநின்று ஆராய்ந்து முடிவு செய்து விளக்கம் கூறும் பகுதியே என்பதை உணர்தல் வேண்டும்.

மேலே கூறிய அடிப்படையில் வாழ்வியற் பிரச்சினைகளை நாம் ஆராய முற்படும் போது, அறிவு என்ற ஒன்றைக் கருவியாகக் கொண்டே அனைத்துப் பிரச்சினைகளையும் ஆராய வேண்டிய நிலைமை உண்டாகிறது மேலும், கடவுள், உயிர் என்பவைகளும் வாழ்வியற் பிரச்சினைகளாக அமைவன போலவே அறிவும் ஒரு வாழ்வியற் பிரச்சினையே. எனவே அறிவைப் பற்றி மட்டும் எழுகின்ற தனிச் சிந்தனைகள் பலவற்றை ஆராய்ந்தால் தான் அறிவைப் பற்றிய ஒரு தெளிந்த எண்ணத்தை நாம் பெற முடியும்.

இக்காலத் தத்துவ மரபைச் சார்ந்தவர்கள் எந்த ஒரு பிரச்சினையை ஆராய்வதாக இருந்தாலும் அதை அகநிலையில் (Subjective view) வைத்து ஆராய்வதையே குறிக்கோளாகக் கொள்கின்றனர். இவ்வடிப்படையில் நம்முடைய அறிவு எவ்வாறு அமைக்கப்பெறுகிறது? நம்முடைய அறிவையே புறநிலைப் பொருளாக நிறுத்தி ஆராய்வதே அவர்கள் பெரிதும் மேற்கொண்ட பணி.

மக்களின் அறிவைப் பொறுத்த வரையில் இரண்டு வகையான கருத்துகள் அமைக்கப் பெற்றன. அவை அறிவு என்பது இயற்கையா? செயற்கையா? என்ற ஐயத்தை உட்கொண்டது.

(1) அறிவு என்பது கருத்துக்கோவை. இது தனித்த எண்ணங்களால் உருவாக்கப் பெறுகிறது. எல்லாக் கருத்துகளும் நம் மனத்தில் உள்ளார்ந்த எண்ணங்களாக (Innate Ideas) இருக்கின்றன. இயல்பாகவே மனித மனத்தில் உள்ளார்ந்த நிலையில் கிடக்கும் எண்ணங்களை வேண்டிய போது விரைவாக வெளிக் கொணர்ந்து கூறுவதே உயர்ந்த அறிவின் தன்மை என்பது இவ்வகையினரின் கொள்கை. வெளியில் நாம் காணும் பொருள்கள் எத்தகைய அமைப்பைக் கொண்டிருக்கின்றனவோ அதே அமைப்பை நம் மனத்தில் உள்ள எண்ணங்களும் பெற்றிருக்கின்றன. ஆகையினால் புறவுலகில் அமைந்து கிடக்கின்ற பொருள்களை அனுபவத்தின் மூலம் அறியாமலேயே அவைகளைப் பற்றிய செய்திகளை நாம் அறிய முடியும். இக்கொள்கை 'அறிவு முதற் கொள்கை' (Rationalisn) எனப் பெற்றது.

(2) அறிவு என்பது நம் அனுபவத்தின் மூலமாக வெளியிலிருந்து வந்து சேருவதே. இயற்கையன்று, செயற்கையே. நம் மனத்தில், உருக்கும் எண்ணங்கள் என்பவை நாம் அனுபவித்துக் கண்டவைகளின் பிரதிகளே. சுருங்கக் கூறின் எண்ணங்கள் அல்லது கருத்துகள் எனப்படுபவை நம்முடைய அனுபவத்திலிருந்து அனுமானிக்கப் பெற்றவைகளே. நம்முடைய மனத்தில் உள்ளார்ந்த எண்ணங்களாக எல்லாமே இருக்கின்றன என்று சொல்வது தவறு. நம்முடைய மனம் எந்த ஒன்றும் எழுதப் பெருத வெற்றுக் கறும்பலகையைப் போலவே இருக்கிறது. அனுபவத்தின் மூலமாகத் தான் ஒவ்வொன்ருக, படிப்படியாக எண்ணங்களை நாம் சேர்த்துக் கொள்ளுகிரேம். புறப்பொருள்களை எந்த அளவு அனுபவித்திருக்கிரேமோ அந்த அளவுக்குத்தான் நம்முடைய மனத்தில் எண்ணங்கள் நிரம்புகின்றன. ஒன்றை அனுபவிக்கவில்லையானல் அதைப்பற்றிய எண்ணம் நம் மனத்தில் நிச்சயமாக இருக்காது. ஒன்றைப் பற்றிய எண்ணம் நம் மனத்தில் இல்லையானல் அவ்வெண்ணத்துக்குரிய பொருளை நாம் அனுபவிக்கவில்லை என்பது தேற்றம். இங்கே அறிவின் முதிர்ச்சி என்பது அனுபவங்களின் அளவின் எல்லையைப் பொறுத்தே அமைகின்றது, இக்கொள்கையினர் அனுபவ வழிக் கொள்கையினர் எனப் பெற்றனர்.

அறிவு முதற் கொள்கையினரின் கருத்துப்படி அறிவு இயற்கையானதே; அனுபவ வழிக் கொள்கையினரின் கருத்துப்படி அறிவு செயற்கையானதே.

இவ்விருவகை நெறிகளையும் முறையே ஆராய்ந்தவர் இமானுவேல் காண்ட் எனப்பெறும் ஜெர்மானியத் தத்துவ அறிஞர். அவர் இந்த இருவகைக் கொள்கைகளையும் விரிவாக ஆராய்ந்து இவ்விருவகைக் கொள்கைளின் இன்றியமையாக் சிறப்புகளைக் குறிப்பிட்டுக் காட்டியதோடன்றி, இவைகள் தனித்தனியே நின்று மனித அறிவை உண்டாக்க முடியாது என்றும் வரையறைப் படுத்தினர்· அறிவு முதற்கொள்கையானது அனுபவ வழிக் கொள்கைகளை முற்றும் புறக்கணிக்க முடியாது; அவ்வாறே அனுபவ வழிக் கொள்கையும் அறிவு முதற்

கொள்கையை முற்றிலும் ஒதுக்கி விட முடியாது என்றும் கூறினர். இரண்டன் இணைப்பே அறிவின் உண்மைநிலை என்று ஒரு இணைப்புத் தத்துவத்தை உருவாக்கினர்.

தமிழகத்தில் இரட்டைப் புலவர் வரலாறு இன்னும் மறைந்து போக வில்லை. இலக்கியத்துறையில் இரட்டைப் புலவர் பற்றிய செய்திகள் மறக்கப் பெறும் சூழ்நிலை வந்தாலும், மெய்ப்பொருளியல் உலகம் இரட்டைப் புலவர்களை அடிப்படையாக வைத்துக் கொண்டு விளக்கும் செய்திகள் பல.

இரட்டைப் புலவர்களில் ஒருவர் முடவர்; ஏனையவர் குருடர், வழி நடப்பது என்பது ஒருவரால் மட்டுமே அமையக் கூடிய செயல் அன்று. முடவர் கண் பெற்றவர்; செயற்பாடு அற்றவர். குருடர் கண் இல்லாத வர் செயற்பட முடிந்தவர். இருவரும் ஒருவரை நீக்கி அல்லது புறக் கணித்து ஒருவர் மட்டுமே குறிப்பிட்ட இடம் போய் சேர்தல் இல்லை. இருவரும் இணைதல் வேண்டும். அவ்வாறே அறிவு முதற் கொள்கை யும் அனுபவ வழிக் கொள்கையும் இணையும் போதுதான் அறிவு அமை கிறது. அறிவுமுதற் கொள்கையானது அனுபவவழிக் கொள்கையோடு இணையாவிட்டால் அது உள்ளீடற்றது; அனுபவவழிக் கொள்கையானது அறிவு முதற் கொள்கையோடு இணையாவிட்டால் அது குருட்டுத்தன மானது. மேலே கூறிய கருத்துகளை இணைத்துக் காணும்போது அறிவு இயற்கையாகவே அமைந்ததும் அன்று; செயற்கையாகவே உருவாக்கப் பெறுவதும் அன்று; இரண்டும் இணைந்த இணைப்பே என உணரலாம்.

---



---

# சமயப்பணியில் மாதர்

[திருமதி. சரோஜனி சுப்பிரமணியம்]

சில நாட்களுக்கு முன் அகில இந்திய வானெலியில் ஒரு நிகழ்ச்சி நடந்தது. சமய அறிவு தேவையா, இல்லையா என்று ஒரு விவாதம் நிகழ்த்தினர்கள். இருவர் சமய அறிவு வேண்டும் என்று வாதிட்டார்கள் இன்னெருவர் பகுத்தறிவு மட்டும் இருந்தால் போதும் என்ருர். எங்கள் வீட்டிலும் இரண்டு கட்சி, என் பெரிய பையன் B.Sc. படிப்பவன். கொஞ்சம் முற்போக்கு நோக்கம் உடையவன். "திருப்புகழ், தேவாரம், திருவாசகம், அபிராமி அந்தாதி எல்லாம் படிக்கிறீர்களே, அவைகளால் என்ன பயன் ? என்று கேட்பான். அவன் படிப்பதெல்லாம் பெரிய பெரிய விஷயங்கள். பல நூலகங்களிலிருந்தும் விஞ்ஞானப் புத்தகங்களாக எடுத்து வருவான். Intelligence in the Universe, Wide Ocean, & Unmanned Space Flight என்ற புத்தகங்கள். அதில் ஆர்வமிருக்கிறது. ஆழ்ந்து சுவைத்துப் படிப்பான். விஞ்ஞான அறிவு வளர்ந்த தனுல்தானே இன்று மனிதன் சந்திரனை எட்டிப்பிடித்திருக்கிருன் என்பான். ஆனுல் விஞ்ஞான அறிவுக்கும் மேலாக ஒரு தெய்வ சக்தி இருந்து இயக்குகிறது என்பதை உணரவில்லை. விண்வெளிக் கப்பலில் கோளாறு ஏற்பட்டபோது விண்வெளி வீரர்களும், ஏன் உலகம் முழுவதுமே இறைவனை நோக்கி வேண்டிக் கொண்டது என்ன? விண் வெளிக்குச் சென்ற வீரர்கள் பத்திரமாக பூமித்தாயை வந்து சேர வேண்டும் என்றுதான். பிரார்த்தனை வீண்போகாமல் விண்வெளி வீரர் களும் பத்திரமாக வந்து சேர்ந்தார்கள். கேள்விகள் பல கேட்டாலும் கலாசாலைக்கு காலையில் புறப்படும் பொழுது இறைவனை வணங்கி திரு நீற்றை நெற்றியில் அணியாமல் செல்வதில்லை. ஏன்? பரம்பரை பரம் பரையாக வந்த பழக்கம். இறைவனை வணங்க வேண்டும் என்று தாய் மார்கள் கற்றுக்கொடுக்கிருேமே, அதுவே போதும். என் மற்ற இரு குழந்தைகளுக்கும் நம்முடைய தெய்வ மணம் கமழும் பாடல்களைப் பாடுவதிலும் சமய நூல்களைப்பற்றி அறிவதிலும் ஆர்வம் இருக்கிறது. அவர்களுக்குச் சமய அறிவு தேவையாக இருக்கிறது. எனக்குத் தெரிந்த சமய அறிவை அவர்களுக்கும் போதிக்கிறேன். என் மூத்த பையனிட மும் "தம்பி, உன்னுடைய விஞ்ஞான அறிவினுல், உலகம் பலவிதங்களில் வளர்ச்சி அடையலாம். ஆனுல் அந்த அறிவினுல் அன்பை உண்டாக்க முடியாது. பண்பை வளர்க்க முடியாது" என்று கூறுவேன் நம் சமயங்கள். இந்துமதமாகட்டும், கிருஸ்துவ மதமாகட்டும், ஏன் இஸ்லாம் மதமும் கூட அன்பு நெறியைப் பற்றியும் பண்பைப் பற்றியும் தானே அறிவுறுத்து கின்றன. நம் புராணங்கள், இதிகாசங்கள் தாய், தந்தை தான் உலகம், அவர்கள் சொல்லுக்கு மிஞ்சிய மந்திரமில்லை, கணவனை விட வேறு தெய்வமில்லை, என்று போதிக்கின்றன. நம் சைவ சமயத்தின் தத்துவமும் அன்பே சிவம், தான்.

மனிதன் வெறும் உணவை மட்டும் உண்பதால் திருப்தியாக வாழ்ந்து விட முடியாது. ஏழையும் பணக்காரனும், உழைத்தாலும் வாழ்ந்தாலும் தன்னுடைய வாழ்க்கை நிறைவு பெற இறைவனைத்தான் வேண்டுகிருன். எல்லாவற்றிற்கும் மேலாக தெய்வம் என்று ஒன்று உண்டு, நாம் நல்வழியில் நடந்தால் இறையருள் கிடைக்கும் என்று நம்புகிருேம். தெய்வத்தை மறந்து, சமயக் கோட்பாடுகளை மறந்து, நமது பண்டைய பண்புகளைப் பின்பற்றவில்லையானல் சமூகத்தில் தீங்குகள் ஏற்பட்டு சமூகம் நாசமடையும். அன்பையும் அறனையும் வளர்த்து பண்பையும் பக்தியையும் பயிர் செய்தோமானல் நாம் வாழும் உலகம் சுவர்க்கமாகி விடும்.

இந்த மாதிரி சமய அறிவை, சமயப்பணியை தன் குடும்பத்திலும் வெளியிலும் நடத்த தாய்க்குலமே வழிகாட்டியாகும். அறங்காத்தும், சமயப்பணி செய்து அன்பு காட்டியதாலும் நம் பாரதப் பெண்குலம், அதுவும் தமிழகப் பெண்குலம் "வான்புகழ் பெற்றது".

ஔவைப் பிராட்டியும், செம்பியன் மாதேவியும், காரைக்காலம்மையாரும், மங்கையர்க்கரசியாரும், திலகவதியாரும், கண்ணகியாரும் நமக்கு வழிகாட்டியாக விளங்குகிருர்கள். மங்கையர்க்கெல்லாம் தனியரசியாகத் திகழ்ந்த பாண்டிமாதேவி அழகிலும், அறிவிலும், கற்பிலும், சிவபக்தியிலும் சிறந்து விளங்குகிருள். தொண்டை நாட்டிலே திலகவதியாரும் பாண்டிய நாட்டிலே மங்கையர்க்கரசியாரும் அருள்வழி காட்டி நாட்டை நல்வழிப்படுத்தியிருக்காவிட்டால் தமிழ் நாட்டின் சரித்திரமே மாறியிருக்கும். சைவ நெறியும் அழிந்து போயிருக்கும்.

" மங்கையர்க்குத் தனியரசி எங்கள் தெய்வம்
வளவர்திருக்குலக் கொழுந்து வளைக்கை மானி
செங்கமலத் திருமடந்தை கன்னி நாடாள்
தென்னர் குலப் பழிதீர்த்த தெய்வப் பாவை.

மங்கையர்க்கு அரசியாக பாண்டிய மன்னன் நெடுமாறனை மணந்து, வாழ்ந்த பாண்டிமாதேவி மங்கையர்க்கரசியார். வளவர் திருக்குலக் கொழுந்தைக் கைப்பற்றிய மன்னவனும் அற நெறியில் நின்று செங்கோல் செலுத்தி வந்தான். அமைச்சர் குலச்சிறையார் அரசனுக்குத் துணை நின்று செந்தமிழ் நாடு தழைக்கச் செய்தார்.

பாண்டிய நாட்டின் தீவினைப் பயனல் பாண்டியன் நெடுமாறன் சைவ நெறியினின்றும் மாறிச் சமண மதத்தைத் தழுவினன். அரசனைப் பின் பற்றிக் குடிமக்களும் சமண நெறியைச் சார்ந்தார்கள். கணவன் வழியில் நடப்பது மனைவியின் கடமையானலும் அரசி மங்கயர்க்கரசியார் தன் விருப்பத்திற்கு மாறுன வழியைப் பின்பற்ற விரும்பவில்லை, அரசனும் வற்புறுத்தவில்லை. அரசியும், அமைச்சர் குலச்சிறையாரும் சைவநெறியைப் பின்பற்றி வாழ்ந்து வந்தார்கள். சமணர்களுடைய ஆர்ப்பாட்டத்தாலும் பழக்கத்தாலும் மன்னனின் அறிவு மயங்கியது. மதுரை நகரில் கோவிலுக்குச் சென்று வழிபடுபவர்கள் குறைந்தார்கள். திருநீற்றின்

ஒளியும் மறைந்தது. எங்கும் சமணர்களின் பாயும், பீலியும் நிறைந்தன. நாடு முழுமைக்கும் அருகர் பள்ளிகள் ஏற்படுத்தப்பட்டன. மன்னனையும் தம்வசப்படுத்தி அரசியலில் குறுக்கிட்டு அவர்களுக்கு வேண்டியதை சாதித்துக் கொண்டனர். சைவ நெறிக்கும் பாண்டிய நாட்டிற்கும் ஏற்பட்ட தீங்கினை எண்ணி அரசியும் அமைச்சரும் வருந்தினார்கள்; அரசனோ வேறு மதத்தைச் சார்ந்திருக்கிறான். அவன் முன் சிவபக்தையாக விளங்கினால் 'கண்டு முட்டு' சைவப்புகழை கேட்டாலோ 'கேட்டு முட்டு'. கணவனைப்பின்பற்ற முடியாமலும் அவனை நல்வழிப்படுத்த முடியாமலும் அரசி தவித்தாள்.

வேத நெறி தழைத்தோங்க தென்னாட்டில் தோன்றிய திருஞான சம்பந்தப் பெருமான் திருமறைக்காடு வந்திருந்த நற்செய்தியை அறிந்தார்கள். அவரை அழைத்து வரத் தூதுவனை அனுப்பினார்கள். அவரும் அரசியின் வேண்டுகோளை ஏற்று, மதுரைநகர் வந்தார். அமைச்சரும் சென்ற காலத்தின் பழுதிலாத்திறமும் இனியெதிர் காலத்தின் சிறப்பும் இன்று எழுந்தருளப் பெற்றபேறு இதனால் என்றைக்கும் திருவருளுடையோம் என்று வாழ்த்துக் கூறி வரவேற்றார். நாளும் தமிழிசையால் சைவம் பரப்பிய ஞானசம்பந்தர் வரவு கேட்டு சமணர்கள் கலங்கினார்கள். மன்னருடைய உத்தரவில்லாமலேயே ஞான சம்பந்தப் பெருமானும் சிவனடியார்களும் தங்கியிருந்த மடத்திற்கு தீ வைத்தனர். அரசனை சமண சமயத்தினின்றும் மீட்டு ஆட்கொள்ள நினைத்து 'பையவே சென்று பாண்டியர்க்காகவே என்று சம்பந்தர் பாடினார். வெப்பு நோய் அரசனைப் பற்றிக் கொண்டது. நோயின் வேதனை தாங்காது துடித்தான். சமணர்களின் மந்திரமோ தந்திரமோ மன்னனின் நோயைத் தீர்க்கவில்லை. அரசி மங்கையர்கரசியாரும் அமைச்சரும் சம்பந்தப் பெருமானை வரவழைத்து ஆலவாயனின் அருளால் மன்னனின் வெப்பு நோய் நீங்கும்படி வேண்டிக் கொண்டனர். அவரும் பதிகம் பாடி அரசன் நோயைக் குணப்படுத்தினார். அரசனும் தான் இது காறும் செய்து வந்த தவறை உணர்ந்து சம்பந்தப் பெருமானிடம் மன்னித்தருள வேண்டினர். சமணர்கள் பெருமானோடு நீரிலும் நெருப்பிலும் வாதிட்டுத் தோற்றனர். அரசனும் சமண சமயப்பற்று நீங்கினான். சூழ்ச்சி செய்த சமணர்களைப் பாண்டிய நாட்டை விட்டு விரட்டி அடித்தான். சைவ நெறியைப் பின்பற்றினான். சைவமும் மறுமலர்ச்சி பெற்றது.

மானினேர் விழி மாதராய் வழுதிக்கு மாபெருந்தேவி பணி செய்து பரவியதால்தான் பாண்டிய நாட்டில் சைவம் தழைத்தது. மக்களும் காப்பாற்றப் பட்டனர். கொண்ட கணவனும் நல்வழி பற்றி நடக்கத் தூண்டினார். சைவமும் தமிழும் என்றென்றும் இவர் புகழ் பாடும்.

சமயப்பணி செய்த மாதரசிகள் புகழ் பற்றிப்பாட, எழுத சலிப்பு ஏற்படாது, ஒரு புது உணர்வு ஏற்படும். அந்த அளவுக்குப் பணி செய்யத் தகுதி இல்லை, வாய்ப்பும் இல்லையானாலும் 'சமயப் பணியில் மாதர்' என்ற கட்டுரையை எழுத என்னைப் பணித்த தவத்திரு அடிகளார் அவர்களுக்கு என் பணிவன்பான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

# கோயிலில் அறப்பணிகள்

[திரு. கே. ஸ்ரீதரன், எம்.ஏ.,]

'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்பது பழமொழி. பண்டைக்காலத்தில் தமிழகத்தை ஆண்ட மன்னர்கள், நமக்கு நல் வாழ்வு நல்கும் இறைவனுக்குக் கோயில்களை எழுப்பி, அவற்றிற்குக் கொடைகளையும் அளித்தனர். அவ்வாறு அளித்த கொடைகளை கோயிலின் சுவர்களில் கல்வெட்டுகளாகப் பொறித்தனர். அக்கல் வெட்டுகள் மன்னர்கள் அளித்த கொடைகளைத் தவிர மற்றும் பல செய்திகளைத் தருகின்றன.

செங்கற்பட்டு மாவட்டம் காஞ்சிபுரத்துக்குப் பக்கத்தில் உள்ள திருமுக்கூடல் என்ற இடத்திலிருந்து கிடைத்த வீரராசேந்திரன் கல் வெட்டு, அவ்வூரில் உள்ள திருமால் கோயிலில், வீர சோழன் என்ற பெயரால் ஆதுலர்சாலையும், மருத்துவம் கற்பிக்கும் கலாசாலையும் கோயிலால் நிர்வகிக்கப் பெற்று வந்த செய்தியைக் கூறுகிறது. (S.I.T.I. Vol. III) அவ்வாதுலர்சாலையில் ஓராண்டுக்கு வேண்டிய மருந்து வகைகள் இருந்தன என்றும், ஒரு மருத்துவனும், சல்லியக்கிரியை (அறுவைசிகிச்சை) பண்ணுவான் என்பானும் பரம்பரை உரிமை உடை யோராய் மருத்துவம் செய்தனர். நோயாளிகளுக்குத் துணையாக மருத்துவப் பணிமகளிர் பலர் இருந்தனர் என்றும் தெரிகிறது. இங்கி ருந்த மருத்துவற்குக் கோதண்டராமன் அசுவத்தாம பட்டன் என்று பெயர். இவ்வாறு மருத்துவச்சாலை இருந்ததாகப் பல கல்வெட்டுகள் கூறுகின்றன.

அக்காலத்தில் கோயிலில் நாள்தோறும் வேதம் வல்ல அந்தணர்க் கும் சிவயோகிகளுக்கும் உணவு வழங்க வேண்டும் என்ற வழக்கு இருந்த தாகக் கல்வெட்டுகளால் தெரிகிறது.

உத்தம அக்கிரமாகத்தேவர் அமிர்து செய்யும் பொழுது வேதப் பிராமணர் நிசதம் ஐவர்க்கு அமுது செய்விக்க வேண்டும். பத்தெட்டுக் குத்தல் அரிசி, நாள் ஒன்றுக்கு இரு நாழி, கறி மூன்று, தயிர் நாழி, நெய் இரு செவிடு, காயிலை இரண்டு (பாக்கு வெற்றிலை), தாம்பாளம் ஐந்து, வட்டில் ஐந்து, ஒட்டுட்டி ஒன்று, சட்டுவம் ஒன்று. அடுவான் ஒருவனுக்கு நாடோறும் நெல் ஐந்துநாழி. ஆறு திங்களுக்கு ஒரு புடவை. மேற்குறித்தவாறு ஆனைமலை நரசிங்கப் பெருமானுக்கு நிவே தனம் செய்ய வேண்டும் என்று முதற்பராந்தக சோழனுடைய ஆனை மலைக் கல்வெட்டால் அறியப் பெறுகின்றது.

குடந்தைக் கீழ்க்கோட்டம் எனப்பெறும் நாகேசுவர சுவாமி கோயிலில் உள்ள இரண்டாம் ஆதித்தன் காலத்துக் கல்வெட்டில், அன்னம் அளிக்க நில மளித்தான் என்று கூறுகின்றது.

திருமால்புரக் கல்வெட்டு, ஆற்காடு மாவட்டம் பிரமதேசத்திலுள்ள கல்வெட்டு, போன்ற பல கல்வெட்டுகள் அன்னமளித்ததைக் கூறு கின்றன.

மணவில் கூத்தன் என்பவன் முதல்குலோத்துங்கன் காலத்துப் படைத்தலைவன். இவன் தில்லையில் ஓராயிரம் கறவைப் பசுக்களைக் கொடுத்தான். குழந்தைகளுக்குப் பாலும், எண்ணெயும் நாள் தோறும் கொடுக்கச் செய்தான் என்று தில்லைக் கல்வெட்டுக் கூறும்.

அக்காலத்தில் திருவெம்பாவை கோயிலில் ஓதப்பட்டு வந்தது என்பது கீழ்க்காணும் கல்வெட்டால் அறியப்படுகிறது.

வீரராசேந்திர சோழன் காலத்து திருவொற்றியூர்க் கல்வெட்டுச் செய்தி அம்மன்னன் அளித்த நிலத்தின் வருமானத்தைக் கொண்டு, திரு வொற்றியூர்க் கோயிலில் பல அறங்கள் செய்யப்பட்டன. ஓர் இசை வல்லார் திருப்பள்ளி எழுச்சி பாடுதல் வேண்டும். திருவாதிரைத் திரு நாள் விழா நடத்த வேண்டும். பாடலும் ஆடலும் வல்ல இருபத்திரண்டு தளியிலார்க்கு ஊதியம் தரவேண்டும் என்பது செய்தி. (128 of 1912) இவ்வாறு கீழூர்க் கல்வெட்டும், வீரட்டானேசுவரர் கோயில் கல்வெட்டும் கூறுகின்றன.

இவ்வாறு கோயில்கள் அக்காலத்தில் வழிபாடு செய்யும் இடங்களாக மட்டும் இல்லாமல், கோயில்கள் மக்களுக்கு அறப்பணி செய்யும் இடங்க ளாகவும் அமைந்திருந்தன என்பது தெளிவாகின்றது.

— — —

தமிழகம் தெய்வமணம் கமழும் திருநாடு. இறைமணம் கமழும் இன்பத்திருநாடு ! விண்ணையளந்துகாட்டி வினைமறைக்கும் திருக் கோயில்கள் நிறைந்த நாடு. கல்லெல்லாம் கலையாக்கிப் பொற்சித் திரமாக்கினர்; அவ்வழி அருளும் பொருளும் உணர்த்தினர் நமது முன்னோர். உலக மொழிகளில் பத்திமையுணர்வுக்குரிய மொழி தமிழேயாம். நெஞ்சினை நெகிழச் செய்து உருக்கும் பாடல்கள் தமிழிலேயே உண்டு. சமயத்துறையில் நமக்குப் பழைய புகழ் நிறைய உண்டு. கங்குகரையற்ற பலதலைமுறை மகிழ்ந்து அனு பவிக்கக் கூடிய தத்துவச் செல்வங்களும் கலைச்செல்வங்களும் உண்டு. ஆனல், அவையெல்லாம் இருந்தும் துய்த்தறியாத வறுமை யாளர்களாக நம்முடைய சமுதாயத்தைச் சேர்ந்த பல ரிருப்பது ஒரு பெரிய குறையே !

—தவத்திரு குன்றக்குடி அடிகளார்

[18-ஆம் பக்கத் தொடர்ச்சி]

வாளோடிய தடங்கண்ணியர் வலையில்லழுந் தாதே
நாளோடிய நமனார்தமர் நணுகாமுனம் நணுகி
ஆளாயுய்ம்மின் அடிகட்கிட மதுவேயெனில் இதுவே
கீளோடர வசைத்தானிடங் கேதார மெனீரே.

"திருவாசகத்திற்குருகார் ஒருவாசகத்திற்குமுருகார்" என்று போற்றப்படும் திருவாசகத்தில் மாணிக்கவாசகர் பல அறிவுரைகளால் மக்களைத் தெருட்டியுள்ளார். 'ஆடுகின்றிலை கூத்துடையான் கழற்கு' என்று நெஞ்சை அறிவுறுத்துகின்றார்.

யாத்திரைப் பத்து என்ற பகுதியில் உயர்ந்த கருத்தை மணிவாசகர் கூறுவது நினைந்து இன்புறத்தக்கது.

விடுமின் வெகுளி வேட்கை நோய் மிகவோர் காலம் இனியில்லை
உடையான் அடிக்கீழ்ப் பெருஞ்சாத்தோடுடன் போவதற்கே ஒருப் [படுமின்
அடைவோம் நாம் போய்ச் சிவபுரத்துள் அணியார் கதவ தடை [யாமே
புடைபட்டுருகிப் போற்றுவோம் புயங்கன் ஆள்வான் புகழ்களையே.

[கோபத்தை விடுங்கள், ஆசையை விடுங்கள், இப்படிச் செய்தால் நம்மைத் துன்பம் அணுகும் காலம் இனிஇல்லை. இறைவன் திருவடியில் அடியாருடன் செல்ல ஒருமனப்படுங்கள். இறைவன் திருமுன் அவனது சிவபுரக்கதவு சாத்தப்படுவதற்குமுன் செல்வோம். அவன் புகழை உள்ளம் உருகிப் போற்றுவோம்]

பிற்காலச் சான்றோர் இராமலிங்க அடிகள் உலக மக்களுக்கு விடுத்த செய்திகள் மிகப் பலவாகும். அவற்றுள் ஒன்றினை மட்டும் எடுத்தெழுதி இக்கட்டுரையை முடிக்கின்றேன்.

ஒருமையுடனினது திருமலரடி நினைக்கின்ற வுத்தமர் தமுறவு [வேண்டும்
உள்ளொன்று வைத்துப் புறம் பொன்று பேசுவாருறவுகலவாமை [வேண்டும்
பெருமைபெறு நினது புகழ் பேசவேண்டும் பொய்மை பேசாதிருக்க [வேண்டும்
பெரு நெறி பிடித் தொழுக வேண்டு மதமான பேய்பிடியாதிருக்க [வேண்டும்
மருவு பெண்ணாசையை மறக்கவே வேண்டுமுனை மறவாதிருக்க [வேண்டும்
மதி வேண்டு நின் கருணை நிதி வேண்டு நோயற்ற வாழ்வினான் [வாழ வேண்டும்

என்று இவ்விதமாகக் கந்தப் பெருமானை வேண்டும் திறம் எல்லோராலும் போற்றத்தக்கது.

இவ்விதமாகச் சமயச் சான்றோர் அறவுரைகளை மனத்துட் பதித்துப் பயன் எய்துவோமாக.

# "அருளோசை"

அடுத்த இதழில்

(15—10—72)

தவத்திரு குன்றக்குடி அடிகளார்

அவர்கள் எழுதும்

## "வள்ளுவர் வழியில். . . ."

என்ற தொடர் கட்டுரை ஆரம்பமாகிறது

—ஆசிரியர்

---

## நவராத்திரி விழா-வேண்டுகோள்.

நவராத்திரி விழா ஆண்டு தோறும் புரட்டாசித் திங்கள் வளர் பிறைப் பிரதமை முதல் நவமி வரையுள்ள நாட்களில் கொண்டாடப் பெறுவது.

இவ்வாண்டு நவராத்திரி விழா புரட்டாசித் திங்கள் 22ஆம் நாள் தொடங்கி 30ஆம் நாள் (8-10-72 முதல் 16-10-72) நிறைவு பெறுகிறது. இவ்விழா நாட்களில் வழிபாடு நடத்துவதுடன் விரதம் அனுட்டித்து அபிராமி அந்தாதி, சகலகலாவல்லி மாலை முதலான தோத்திரப் பாடல்களைப் பாராயணம் செய்வது சிறந்த பலனைத் தருவதாகும். அபிராமி அந்தாதிப் பாடல்களை நல்லமுறையில் ஒப்புவிக்கும் பள்ளி மாணவ மாணவியருக்குப் பரிசு வழங்குவது என்று பேரவை தீர்மானித்திருக்கிறது. அபிராமி அந்தாதியை அனைவரும் படித்துப் பயன் பெறும் வண்ணம் பேரவையில் அச்சிட்டு குறைந்த விலையில் வழங்கப்படுகிறது. பிரதிகள் வேண்டுவோர் பேரவைக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம். தமிழக மெங்கும் உள்ள திருக்கோயில்களிலும் மன்றங்களிலும் இல்லங் களிலும் இவ்விழாவைச் சிறப்பாகக் கொண்டாடுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறது.

அ. நாராயணசுவாமி, பி.ஏ.,

செயலாளர்

Edited, Printed at Peravai Achakam and Published by A. Narayanaswamy B. A., for the Tamil Nadu Deivika Peravai at No. 9, Maharaja Surya Rao Road,